உ

சிதம்பரம்.

# திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்
# இராமலிங்கப்பிள்ளை திருவாய்மலர்ந்தருளிய
# திருவருட்பா,

இஃது

சரவணபுரம்

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.

---


புரசைபாக்கம்.

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்கச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சித்திரபாநு௵.



உ

கணபதி துணை.

# திருவருட்பா.

## திருச்சிற்றம்பலம்.

அருட்சோதித்தெய்வமெனையாண்டுகொண்டதெய்வ
ம், அம்பலத்தேயாடுகின்றஆனந்தத்தெய்வம்
பொருட்சாருமறைகளெலாம்போற்றுகின்றதெய்வ
ம், போதாந்ததெய்வமுயர்நாதாந்ததெய்வம்
இருட்பாடுநீக்கியொளிர் ஈந்தருளுந்தெய்வம், எ
ண்ணியநானெண்ணியவர்றெனக்கருளுந்தெய்வ
தெருட்பாடலுவந்தெனையுஞ்சிவமாக்குந்தெய்வ
சிற்சபையில்விளங்குகின்றதெய்வமதேதெய்வ

எல்லாஞ்செய்வல்லதெய்வமெங்குநிறைதெய்வம்
என்னுயிரிற்கலந்தெனக்கேயின்பநல்குந்தெய்வ
நல்லார்க்குநல்லதெய்வம்நடுவானதெய்வம்
நற்சபையிலாடுகின்றநடராஜதெய்வம்
கல்லார்க்குங்கற்றவர்க்குங்களிப்பருளுந்தெய்வ
காரணமாந்தெய்வமருட்பூரணமாந்தெய்வம்
செல்லாதநிலைகளெல்லாஞ்செல்லுகின்றதெய்வ
சிற்சபையில்விளங்குகின்றதெய்வமதேதெய்வ

தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்
தன்னை நிகரில்லாத தனித்தலைமைத் தெய்வம்
வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்
மலரடி என் சென்னிமிசை வைத்த பெருந் தெய்வம்
காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம்
கருணைநிதித் தெய்வமுற்றுங் காட்டுவிக்குந் தெய்வ
ம், சேயாக வெனை வளர்க்குந் தெய்வமகா தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.
என்னிதய கமலத்தேயிருந்தருளுந் தெய்வம்
என்னிரண்டு கண்மணிக்குளிலங்குகின்ற தெய்வம்
பொன்னடி என் சென்னியிலே பொருந்த வைத்த தெ
ய்வம், பொய்யாத தெய்வமிடர் செய்யாத தெய்வம்
அன்னியமல்லாத் தெய்வமறிவான தெய்வம்
அவ்வறிவுக்கறியாமென்னன்பான தெய்வம், சென்
னிலையிற் செம்பொருளாய்த் திகழ்கின்ற தெய்வம், சி
ற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம், ()
எண்ணியவா விளையாடென்றெனையளித்த தெய்வம்
எல்லாஞ்செய் வல்லசித்தெனக்கீந்த தெய்வம்
நண்ணிய பொன்னம்பலத்தே நடம்புரியுந் தெய்வம்
நானாகித் தானாகி நண்ணுகின்ற தெய்வம்
பண்ணிய வென் பூசையிலே பலித்த பெருந் தெய்வம்
பாடுகின்ற மறைமுடியிலாடுகின்ற தெய்வம்

ஆண்டாரையாண்டதெய்வமருட்சோதித்தெய்வம்
ஆகமவேதாதியெலா மறிவரிதாந்தெய்வம்
ஈண்டாதவெளியிலவரீண்டாதெய்வம்
சிற்சபையில்விளங்குகின்றதெய்வமேதெய்வம் (௮)

எவ்வகைத்தாந்தவருஞ்செயினுமெய்தரிதாந்தெய்வம்
எனக்கெளிதிற்கிடைத்தென்மனையிடங்கொண்டெழு
ஐவகைத்தான்தெய்வமதற்கப்பாலாந்தெய்வம்
அப்பாலும்பெருவெளிக்கேயப்பாலாந்தெய்வம்
ஒவ்வகைத்தேயொளியாகியோங்குகின்றதெய்வம்
ஒன்றானதெய்வமிகநன்றானதெய்வம்
செவ்வகைத்தென்றறிஞரெலாஞ்சேர்பெரியதெய்வம்
சிற்சபையில்விளங்குகின்றதெய்வமேதெய்வம் (௯)

சத்தியமாந்தனித்தெய்வந்தடையறியாத்தெய்வம்
சத்திகளெல்லாம்விளங்கத்தாமோங்குந்தெய்வம்
நித்தியநன்மயமாகிநின்றதெய்வமெல்லா
நிலைகளுந்தன்னருள்வெளியினிலைக்கவைத்ததெ
டத்திலைப்பட்டுநின்றதெய்வமெனக்கெல்லாம்
பரிசளித்தருளியாகத்தில்லைவைத்ததெய்வம்
சித்தியெலாந்தருந்தெய்வஞ்சித்தாந்ததெய்வம்
சிற்சபையில்விளங்குகின்றதெய்வமேதெய்வம் (௰)

திருவருட்பாசரங்கள்.

முற்றிற்று.



௨

## ஆனந்தக்களிப்பு,

சோதியுட்சோதியுட்சோதி — சுத்த
சோதிவச்சோதி — சோதியுட்சோதி
சோதியுட்சோதியுட் — சோதி

சிவமேபொருளென்றதேற்றி — என்னைச்
சிவவெளிக்கேனுஞ்சிகரத்திலேற்றிச்
சிவமாக்கிக்கொண்டதுபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௧)

வித்தெல்லாமென்றென்றுநாட்டி — அதில்
விளைவுபலபலவேறென்றுகாட்டிச்
சித்தெல்லாந்தந்ததுபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௨)

சொலவுற்றவந்தங்களாறும் — ஒரு
சொல்லாலேயாமென்றசொல்லாலேயீறும்
செல்வங்கொடுத்ததுபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௩)

தக்கோலளவெனக்கோதி — சுத்த
சமரசசத்தியசன்மார்க்கநீதி
செங்கோலளித்ததுபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௪)

ஆயத்தைநீக்கிவளர்த்தே — சற்றும்
அசையாமலலியாமலடியேனுளத்தே

நிடத்தைவைத்தது பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநடச்சோதி சோதி (௫)

மெய்யென்று சன்மார்க்கமேநான் என்றும்
விளங்கப்படைப்பாதிமெய்த்தொழில்தந்தான்
செய்யென்றுவந்தது பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநடச்சோதி சோதி (௬)

என்பால்வருபவர்க்கின்றே அருள்
ஈகின்றேனீகின்றேனீகின்றேனென்றே
தென்பாலிருந்தது பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநடச்சோதி சோதி (எ)

அரியத்தலைமூன்றின்மேலே சுத்த
அரியப்பதியிலதுவைதருமேலே
தெரியத்தெரிவது பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநடச்சோதி சோதி (அ)

பதந்தூக்கிக்காட்டியகாலே ஆதி
பாவையிவர்க்கப்பாலப்பாலென்றுமேலே
இதைத்தூக்கிக்காட்டுதல்பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநடச்சோதி சோதி (௯)

தற்பரமேவடிவாகி ஆதி
தன்னைக்கடந்ததனியுருவாகிச்
சிதம்பரத்துள்ளது பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநடச்சோதி சோதி (௰)

# ஆநந்தக்களிப்பு.

நவவெளிநால்வகையாதி — ஒரு
நடுவெளிக்குள்ளே நடத்தியநீதிச்
சிவவெளியாமிதுபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௧௧)

மேருவெற்புச்சியின்பாலே — நின்று
விளங்குமோதம்பத்தின்மேலுக்குமேலே
சேருமோர்மேடைமேற்பாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௰௨)

ஆரணவீதிக்கடையும் — அந்த
ஆகமவீதிக்களாந்தகடையுஞ்
சேரநடுக்கடைபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடைச்சோதி — சோதி (௰௩)

பாடன்மறைகளோர்கோடி — அருட்
பாதவுருவசொரூபங்கள்பாடி
தேடவிருந்ததுபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௰௪)

நீடுசிவாகமங்கோடி — அருள்
நேருறப்பாடியுமாடியுமோடித்
தேடவிருந்ததுபாரீர் — திருச்
சிற்றம்பலத்தேதிருநடச்சோதி — சோதி (௰௫)

ஆநந்தக்களிப்பு
முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்,

திருவருட்பிரகாசவள்ளலார்

என்னும்

சிதம்பரம்இராமலிங்கப்பிள்ளை

அவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# அருட்பா.

---

இஃது.

சிதம்பரம்

வே, சுந்தரம்பிள்ளைகேட்டுக்கொண்டபடி

இஃது சரவணபுரம்.

சண்முகமுதலியாரவர்களால்,

பார்வையிடப்பட்டு.

புரசைபாக்கம்.

எழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்கச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சித்திரபானு ௵



உ

கடவுட்டுணை.

# இராமலிங்கப்பிள்ளை அவர்கள்

## செய்தருளியபாடல்கள்.

---

சிற்சபையும்பொற்சபையுஞ்சொந்தமென தாச்சு
தேவர்களுமூவர்களும்பேசுவதென் பேச்சு
இச்சமயவாழ்விலெனக்கென்னவினி பேச்சு
என்பிறப்புத்துன்பமெலாமின்றோடே போச்சு

ஐயரருட்சோதிஅரசாட்சியென தாச்சு
ஆரணமுமாகமமும் பேசுவதென் பேச்சு
எய்யுலகவாழ்விலெனக் கென்னவினி பேச்சு
என்பிறவித்துன்பமெலாமின்றோடே போச்சு

ஈசனருளாற்கடலிலேற்றவொரு ஓடம்
ஏறிக்கரையேறினேனிந்தவொரு மாடம்
தேசுறுமம்மாடநடுத்தெய்வமணி பீடம்
தீபவொளிகண்டவுடன் சேர்ந்ததுசந் தோடம்

மேருமலையுச்சியில்விளங்குகம்ப நீட்சி
மேவுமதன்மேலுலகில்வீறுமா சாட்சி
சேருமதிற்கண்டபலசாட்சிகள்கண் காட்சி
செப்பலரிதாமிதற்கென்னப்பனருள் சாட்சி

சூரியமலைமேலுளதோர்ஜோதிவளநாடு
தோன்றுமதிலையர்நடஞ்செய்யுமணி வீடு
தெரியுமதுகண்டவர்கள்காணிலுயிரோடு
செத்தவரெழுவாரென்றுகைத்தாளம் போடு

சொல்லாளப்பரியசோதிவரைமீது
தூயதுரியப்பதியில் நேயமறையோது
எல்லாஞ்செயவல்லசித்தர்தம்மையுறும்போது
இறந்தாரெழுவாரென்றுபுறந்தாரைபூது

சிற்பொதுவும்பொற்பொதுவுங்காணறியவாச்சு
சித்தர்களுமுத்தர்களும்பேசுவதென்பேச்சு
இற்பகருமிவ்வுலகி லென்னையினியேச்சு
என்பிறவித்துன்பமெலாமின்றோடேபோச்சு

வலதுசொன்னபேர்களுக்குவந்ததுவாய்த்தாழ்வு

மற்றவரைச்சேர்ந்தவர்க்கும்வந்ததலைத் தாழ்வு
வலதுபுஜமாடநம்மால்வந்ததருள் தாழ்வு
மற்றநமைச்சூழ்ந்தவர்க்கும்வந்ததுநல் வாழ்வு

அம்பலத்திலெங்களையா ராடியநல் லாட்டம்
அன்பொடுதுதித்தவருக்கானதுசொல் லாட்டம்
வம்புசொன்னபேர்களுக்குவந்ததுமல் லாட்டம்
வந்ததலையாட்டமன்றிவந்ததுமல் லாட்டம்

நாத்திகஞ்சொல்கின்றவர்நாக்குமுடை நாக்கு
நாக்குருசிகொள்ளுவது நாறியபிண் ணாக்கு
சீர்த்திபெறுமம்பலவர்சீர்புகன்ற வாக்கு
செல்வாக்குநல்வாக்குதேவர்திரு வாக்கு

கையுறவிலாதுநடுக்கண்புருவப் பூட்டு
கண்டுகளிகொண்டுதிறந்துண்டுநடு நாட்டு
ஐயர்திகழ்வய்யும்வகையையயார்விளை யாட்டு
ஆடுவதென்றேமறைகள்பாடுவது பாட்டு (௰க)

வேறு.

அருட்பெருஞ்சோதியைக் கண்டேனே
ஆனந்தவெள்ளமு முண்டேனே

இருட்பெருமாயையை விண்டேனே
ஈனக்குறைவையும் விண்டேனே. (௨)



## திருச்சிற்றம்பலம்.

கைவிடமாட்டேனென் றூதூது சங்கே
களைகளையானென் றூதூது சங்கே
பொய்விடச்செய்தானென் றூதூது சங்கே
பூசைபலித்ததென் றூதூது சங்கே

தூக்கந்தொலைத்தானென் றூதூது சங்கே
துன்பந்தவிர்த்தானென் றூதூது சங்கே
ஏக்கங்கெடுத்தானென் றூதூது சங்கே
ஏமசபையானென் றூதூது சங்கே

பொன்னடிதந்தானென் றூதூது சங்கே
பொன்னம்பலத்தானென் றூதூது சங்கே
இன்னலெறிந்தானென் றூதூது சங்கே
என்னுளமர்ந்தானென் றூதூது சங்கே

அச்சந்தவிர்த்தானென் றூதூது சங்கே
அம்பலவாணனென் றூதூது சங்கே
இச்சையளித்தானென் றூதூது சங்கே
இன்பங்கொடுத்தானென் றூதூது சங்கே

என்னுயிர்காத்தானென் றூதூது சங்கே
இன்பம்பலித்ததென் றூதூது சங்கே
பொன்னுருதந்தானென் றூதூது சங்கே
பொற்சபையப்பனென் றூதூது சங்கே

சிவமாக்கிகொண்டானென் றூதூது சங்கே
சிற்றம்பலத்தானென் றூதூது சங்கே
நவநோக்களித்தானென் றூதூது சங்கே
நானவனானேனென் றூதூது சங்கே

நாதமுடியானென் றூதூது சங்கே
ஞானசபையானென் றூதூது சங்கே
பாதமளித்தானென் றூதூது சங்கே
பலித்ததுபூசையென் றூதூது சங்கே

தெள்ளமுதானானென் றூதூது சங்கே

சிற்சபையப்பனென் றூதூது சங்கே
உள்ளமுணர்ந்தானென் றூதூது சங்கே
உள்ளதுரைத்தானென் றூதூது சங்கே
என்றறிவாளனென் றூதூது சங்கே

எல்லாஞ்செய்வல்லானென் றூதூது சங்கே
செந்நிலைதந்தானென் றூதூது சங்கே
சிற்சபையப்பனென் றூதூது சங்கே
இறவாமையீந்தானென் றூதூது சங்கே

எண்ணம்பலித்ததென் றூதூது சங்கே
திறமேயளித்தானென் றூதூது சங்கே
சிற்றம்பலத்தானென் றூதூது சங்கே
காவுதவிர்த்தானென் றூதூது சங்கே

கருணைகிடைத்ததென் றூதூது சங்கே
இரவுவிடிந்ததென் றூதூது சங்கே
எண்ணம்பலித்ததென் றூதூது சங்கே
எல்லாஞ்செய்வல்லானென் றூதூது சங்கே

எல்லார்க்குநல்லானென் றூதூது சங்கே

எல்லாமுடையானென் றூதூது சங்கே
எல்லாமுமானானென் றூதூது சங்கே

கருணாநிதியனென் றூதூது சங்கே
கடவுளவனேயென் றூதூது சங்கே
அருளுடைக்கத்தானென் றூதூது சங்கே
அம்பலச்சோதியென் றூதூது சங்கே

தன்னிகரில்லானென் றூதூது சங்கே
தலைவனவனேயென் றூதூது சங்கே
பொன்னியல்வண்ணனென் றூதூது சங்கே
பொதுநடஞ்செய்வானென் றூதூது சங்கே

ஆனந்தநாதனென் றூதூது சங்கே
அருளுடையப்பனென் றூதூது சங்கே
தானந்தமில்லானென் றூதூது சங்கே
தத்துவச்சோதியென் றூதூது சங்கே

பொய்விட்டகன்றோனென் றூதூது சங்கே
புண்ணியனானோனென் றூதூது சங்கே

மெய்தொட்டுநின்றேனென் றூதூது சங்
மேல்வெளிகண்டேனென் றூதூது சங்கே (ம

முற்றிற்று.

—*—

திருச்சிற்றம்பலம்.

மருந்தறியேன்மணியறியேன்மந்திரமொன்றறியே
மதியறியேன்விதியறியேன்வாழ்க்கைநிலையறியேன், தி
வறியேன்திருவருளின் செயலறியேன்றந்தான், செய
றியேன்மனமடங்குந் திறத்தினிலோரிடத்தே, இருந்
யேன் அறிந்தோரை யேத்திடவுமறியேனெந்தைபிரா
னணிமன்றமெய்தவறியேனே, இருந்திசை சொல
பெனெங்ஙனநான்புகுவேன் யார்க்குரைப்பே னென்
செய்வேனேதுமறிந்திலனே. (

அகங்காரக்கொடுங்கிழங்கை யகழ்ந்தெறிய வறியே
அறிவறிந்தவந்தணர்பாற் செறியுநெறியறியேன், நகங்
ளுமுறுசுவர்போல்நலம்புரிந்துமறியேன், நச்சுமரக்க
போல விச்சைகளிற்றழைத்தேன், மகங்காணும்புல வ
லாம் வந்துதொழநடிக்கும் மணிமன்றந் தனையடைய

---

றாதூது யென்பதற்கு-றூதூது இருப்பதால்
மீட்டிவாசிக்கலாம்.

வழியுமறிவேனோ, இங்காணத்திரிகின்றேனெங்ஙனநான் புகுவேன் யார்க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௨)

கற்குமுறைகற்றறியேன் கற்பனகற்றறிந்தகருத்தர்திருக்கூட்டத்திற்களித்திருக்கவறியேன், நிற்குநிலைநின்றறியேன்நின்றாரிடத்தேன், நெடுங்காமப்பெருங்கடலைநீக்கும்வகையறியேன், சிற்குணமாமணிமன்றிற் றிருநடனம்புரியுந், திருவடியென் சென்னிமிசைச் சேர்க்கவறிவேனோ, இற்குணத்தெய்த்துழல்கின்றேனெங்ஙன நான்புகுவேன், யார்க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௩)

தேகமுறுமுடிநிலைத்திறஞ்சிறிதுமறியேன் சித்தாந்தநிலையறியேன் சித்திநிலையறியேன், யோகமுறுநிலைசிறிதுமுணர்ந்தறியேன் சிறியேன் உலகநடையினைக்கிடைந்தேயுழைப்பாரிற்கடையேன், ஆகமுறுதிருநீற்றினொளிவிளக்கமெனுஞ் சிற்றம்பலத்தேயாடியசேவடியையறிவேனோ, ஏகமுறுமலமறியேனெங்ஙனநான்புகுவேன், யார்க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௪)

வேதாந்தநிலைநாடி விரைந்துமுயன்றறியேன், மெய்
கையுங்கைவகையுஞ்செய்வகையுமறியேன், நாதாந்தத்
ருவீதி நடந்திடுதற்கறியேன்நானென்றறியேனொன்
றொன்றறியேன், போதாந்தத்திருநாடுகவறியேன்கு
னபூரணகாயமெனும் பொதுவை யறிவேனோ, ஏதாங்
யேன்சரிதமெங்ஙனநான்புகுவேன், யார்க்குரைப்பே
ன்னசெய்வேனேதுமறிந்திலனே. (

கலைமுடிவுகண்டறியேன் கரணமெலா மடக்குங், க
யறியேன்கதியறிந்தகருத்தர்களையறியேன், கொலைபுலை
ள்விடுத்தறியேன் கோபமறுத்தறியேன் கொடுங்காமக்
டல்கடக்குங் குறிப்பறியேன்குணமா, மலைமிசைநின்
டவறியேன்ஞானநடம்புரியு மணிமன்றந்தனையடையு
வழியுமறிவேனோ, இலையெனும்பொய்யுலகினிடையெ
ஙனநான்புகுவேன், யார்க்குரைப்பே னென்ன செய்வே
னேதுமறிந்திலனே. (

சாதிமதஞ்சமயமெனுஞ் சங்கடம்விட்டறியேன்,சாத்திரச்சேறாடுகின்ற சஞ்சலம்விட் டறியேன், ஆதியந்தநிலையறியேனலையறியாக்கடல்போல் ஆனந்தப்பெரும்போகத்தமர்ந்திடவுமறியேன், நீதிநெறிநடந்தறியேன் சோதிமணிப்பொதுவில் நிருத்தமிடு மொருத்தர்தனிக் கருத்தையறிவேனோ, ஏதிலர்சாருலகினிடை யெங்ஙன நான் புகுவேன், யார்க்குரைப்பே னென்னசெய்வ னேதுமறிந்திலனே. (எ)

சாகாதகலையறியேன்வேகாதகாலின் தரமறியேன்போகாததண்ணீரையறியேன், ஆகாயநிலையறியேன்மாகாயநிலையும் அறியேன்மெய்யறிந்தடங்கு மறிவுறையு மறியேன், மாகாதலுடையபெருந் திருவாளர் வழுத்தும் மணிமன்றந்தனையடையும் வழியுமறிவேனோ, ஏகாயவுலகினிடையெங்ஙனநான்புகுவேன், யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்திலனே. (அ)

தத்துவமென்வயமாகத் தான்செலுத்தவறியேன், சாகாதகல்விகற்குந் தரஞ்சிறிதுமறியேன், அத்தநிலை சந்த

நிலையறியேன் மெய்யறிவை யறியேன் மெய்யறிந் தடங்
றிஞரையுமறியேன், சுத்தசிவசன்மார்க்கத் திருப்பொ
வினிடத்தே தூயநடம்புரிகின்ற நேயமறிவேனோ,
துணையுங்குணமறியேனெங்ஙனநான் புகுவேன், யார்க்
ரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (

வரையபரமார்க்கமொடு பரமார்க்கமறியேன், மரை
யந்தவிர்த்திடுசன் மார்க்கமதையறியேன், நிரையறு
கடலறியேனக்கடலைக்கடந்தே தெள்ளமுத முண
யேன் சினமடக்கவறியேன், உரையுணர்வு கடந்துதிரு
ணிமன்றந்தனிலே ஒருமைநடம்புரிகின்றார் பெருமை
றிவேனோ, இரைத்துறுபொய்யுலகினிடை யெங்ஙன நா
புகுவேன் யார்க்குரைப்பேனென்னசெய்வே னேதும
ந்திலனே. (

முற்றிற்று.

—*—

## திருச்சிற்றம்பலம்.



வானத்தின்மீது மயிலாடக்கண்டேன்
மயில்குயிலாச்சுதடி — அக்கச்சி
மயில்குயிலாச்சுதடி. (௧)

துள்ளலைவிட்டுத் தொடங்கினேனென்மன்றாடும்
வள்ளலைக்கண்டேனடி — அக்கச்சி
வள்ளலைக்கண்டேனடி. (௨)

சாதிச்சமயச் சழக்கைவிட்டேனருட்
சோதியைக்கண்டேனடி — அக்கச்சி
சோதியைக்கண்டேனடி. (௩)

பொய்மையொழித்துப் புறப்பட்டேன்மன்றாடும்
ஐயரைக்கண்டேனடி — அக்கச்சி
ஐயரைக்கண்டேனடி. (௪)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

நடராஜர்பேரில்

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம்

இராமலிங்கப்பிள்ளையவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# அருட்பாமாலை

இஃது

சிதம்பரம்

வே. மாணிக்கம்பிள்ளை கேட்டுக்கொண்டபடி

இஃது.

சரவணபுரம்.

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு

புரசபாக்கம்.

ஏழுமலைப்பிள்ளையவர்களது.

விவேகவிளக்கவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சித்திரபானு௵



உ

திருச்சிற்றம்பலம்,

நடராஜர்பேரில்.

திருவருட்பிரகாசவள்ளலார்

திருவாய்மலர்ந்த

# அருட்ப [illegible] வல



அருள்விளக்கே யருட்சுடரே யருட்சோதிச்சிவமே
ருளமுதே யருணிறைவே யருள்வடிவப்பொருளே, இ
ள்கடிந்தென்னுள முழுதுமிடங்கொண்ட பதியே யெ
னறிவே யென்னுயிரே யெனக்கினிய வுறவே,டருள்கடி
தமாமணியே மாற்றறியாப்பொன்னே மன்றில்நடம்பு
கின்ற மணவாளாவெனக்கே. தெருளளித்த திருவாள
ஞானவுருவாளர் தெய்வநடத்தரசேநான்செய்மொழிே
ற்றருளே, (௧

கோடையிலே யிளைப்பாற்றிக்கொள்ளுமவகை கிடை
த்தகுளிர்தருவே தருநிழலேநிழற்கனிந்தகனியே ஓடை
யிலேயூறுகின்ற தீஞ்சுவைத்தண்ணீரே வுகந்த தண்ண
ரிடை மலர்ந்தசுகந்த மணமலரே, மேடையிலே வீசு
ன்ற மெல்லியபூங்காற்றே மென்காற்றில்விளைசுகமே சு
த்திலுறும் பயனே,ஆடையிலே யெனைமணந்தமண
ளா பொதுவிலாடுகின்றவரசே யென்னலங்க ளணிந்த
ளே,

இன்புறநானெய்ப்பிடத்தே பெற்றபெருவைப்பே
ங்கியபோதென்றன்னைத் தாங்கியநற்றுணையே, அன்பு

வென்னுட்கலந்தே யண்ணிக்குமமுதே யச்சமெலாந்த
விர்த்தென்னையாட்கொண்ட குருவே, என்பருவம் குறியா
தே யெனைமணந்தபதியே யிச்சையுற்றபடியெலா மென
க்கருளுந்துரையே, துன்புறமெய்யன்பருக்கே பொதுந
டஞ்செய்யரசே தூயதிருவடிகளுக்கென்சொல்லு மணி
ந்தருளே. (௫)

ஒசித்தகொடியனையேற்குக் கிடைத்தபெரும்பற்றேயு
ன் மயங்கும்போது மயக்கொழித்தருளுந்தெளிவே, ப
சித்தபொழு தெதிர்கிடைத்த பாற்சோற்றுத்திரளேபய
ந்தபொழு தெல்லாமென் பயந்தவிர்த்ததுரையே நசித்த
வரை யெழுப்பியரு ளைஸ்வரியமாமருந்தே நான்புணரநா
டுகி நண்ணியமெய்ச்சிவமே, கசித்தமனத்தன்பர்தொழு
ப்பொதுநடஞ்செய்யரசே கவித்தெனதுசொன்மாலை க
ழல்லணிந்தருளே. (௬)

மனைபிணித்து வாடியபோதென் னைநீ கிடைத்து
வாட்டமெலாந்தவிர்த்தெனக்கு வாழ்வளித்தநிதியே, சி
னமுகத்தார் தமைக்கண்டு திகைத்தபொழுதவரைச் சிரி
த்தமுகத் தவராக்கி யெனைக்களித்தசிவமே, அனமுகை
த்தா னரிமுதலோர் தருவிற்கவெனக்கே வடிமுடிகள்
காட்டுவித்தே யடிமைகொண்டபதியே, இனமெனப்பே
ரன்பர்தொழும் பொதுநடஞ்செய்யரசே யென்னுடைய
சொன்மாலையாவுமணிந்தருளே. (௭)

கன்றுஞ் சேலைருந்திய வெவ்வருத்தமெலாந் தவிர்த்தே
லிகாயிலெயன்னுளத்தே கிடைத்த பெருங்களிப்பே

செங்குவளைமாலையொடுமல்லிகைப் பூமாலைசேர்ந்தவ
தென்றனைமணந்த தெய்வமணவாளா, எங்குமொளி
மாகிநின்ற நிலைகாட்டியென்னை கத்தும்புறத்தும்நிறை
லங்கிய மெய்ப்பொருளே, தாங்குமறத்திருப்பொதுவி,
ருநடஞ்செய்யரசேசொன்மாலைசூடுகின்றேன்றேருளி
ணிந்தருளே, (

கரைந்துவிடாதென்னுடைய நாவகத்தேயிருந்து க
த்தசுவைதருகின்ற கற்கண்டேகனிவாய். விரைந்து
தென் றுன்பமெலாந் தவிர்த்தவருளமுதே மெய்யரு
மெய்யாகி விளங்குகின்றவிளக்கே, இரைந்தவுடல்வி
ந்துடனே பொன்னுடம்பேயாகித் திகழ்ந்தழியாதே
கவருள் சித்தேமெய்ச்சத்தேவரைந்தென்னைமணம்
ந்து பொதுநடஞ்செய்யரசேமகிழ்வொடுநான் புனைந்
ஞ்சொன்மாலை யணிந்தருளே. (

கதிக்குவழிகாட்டுகின்ற கண்ணேயென்கண்ணிற்கல
தடமணியே மணியிற்கலந்த கதிரொளியே, விதிக்குமு
குயிர்க்குயிராய் விளங்குகின்றவிறைவே மெய்யுணர்வோ
ரகையகத்தே விளங்கியநற்கனியே, மதிக்குமதிக்கப்ப
ம்போய் வயங்குதனிநிலையேமறைமுடியாகம முடிமே
லயங்குமின்பநிறைவே, துதிக்குமன்பர்தொழப் பொ
வில்நடம்புரியுமரசே சொன்மாலைசூட்டுகின்றேன் தே
விலணிந்தருளே. (

தன்பெருமை தானறியாத்தன்மையனேயென்றுதனி
தலைவாவென்னுயிர்க்குளிநித்த தனிச்சுவையே, நி

பெருமை நானறியேநான் மட்டோவறியேன்நெடுமால்நா
ன்முகன் முதலாமூர்த்திகளுமறியார், அன்புறுமாகமம
றைகளறியாவோ வெனினும்அவருமவைகளுஞ்சிலசொல்
லணிகின்றார் நினக்கே,என்பருவங்குறியாதே யெனையா
ண்டவரசே யானுமவர்போ லணிகின்றேனணிந்திடுந் த
ருளே. (௯)

உண்ணவுண்ணத் தெவிட்டாதே தித்தித்தென்னுடம்
போ டுயிருணர்வுங் கலந்துகலந்துள்ளகத்தும் புறத்தும்
தண்ணியவண்ணம் பரவிப்பொங்கி நிறைந்தாங்கே தது
ம்பியென்றன் மயமெல்லாந்தன்மயமேயாக்கி எண்ணிய
வெண்ணெண்ணமெலாமெய்தவொளி வழங்கி யிலங்குகி
ன்ற பேரருளா மின்னமுதத்திரளே, புண்ணியமேயென்
பெரிய பொருளேயென்னரசேபுன்மொழியென் றிகழா
தேபுனைந்துமகிழ்ந்தருளே (௰)

நாட்டார்கள்சூழ்ந்து மதித்திடமணிமேடையிலே நடு
விருக்க வென்றனையே நாட்டியபேரிறைவா, பாட்டாளர்
பாடுதொறும்பரி சளிக்குந்துறையே பண்ணுமறைப்பா
ட்டேமெய்ப்பாட்டினது பயனே, கூட்டாளா சிவகாமக்
கொடிக்கிசைந்த கொழுநா கோவேயென்கணவா வென்
குருவா வென்குணவா, நீட்டாளர் புகழ்ந்தேத்தமணிம
ன்றில் நடிக்கும் நீதிநடத்தரசேயென்னெடு மொழிகொ
ண்டருளே, (௧௧)

கைக்கிசைந்தபொருளே யென்கருத்துக்கிசைந்தகனி
யேகண்ணே யென் கண்களுக்கே கலந்திசைந்தகணவா,
மெய்க்கிசைந்தணிகியபொன் மேடையிலென்னுடனே

மெய்கலந்த தருணத்தேயினிக்கும் பெருஞ்சுகமே, நெய்க்
கிசைந்தவுணவேயென் னெறிக்கிசைந்த நிலையேயித்தியமே
யெல்லாமாஞ் சத்தியமே யுலகில் பொய்க்கிசைந்தார் காணா
தே பொதுநடஞ்செய்யரசே புன்மொழியென் றிகழாதே
புனைந்து மகிழ்ந்தருளே. (௯௯)

நான்பசித்த போதெல்லாந் தான்பசித்த தாகிநல்லுண
வுகொடுத்தென்னைச் செல்வமுறவளர்த்தே, யூன்பசித்த
விளைப்பொன்றுந் தோற்றாதவகைமே லொள்ளிய தென்
னமுதெனக்கிங் களித்த வொளியே- வான்பசிக்கு
நெடுமாற்கு நான்முகற்கு மரிதாம் வாழ்வெனைக்கே யெய்
த வரமளித்த பதியே, தேன்பசிக்கு மலர்மணமே திருப்
பொதுவில் ஞானத்திருநடஞ் செய்யரசே யென் சிறு
மொழியேற்றருளே, (௧௦௦)

கையாததீங்கனியே கசவாதவமுதே களையாதகற்கண்
டேபுரையாதகரும்பே, பொய்யாத பெருவாழ்வே புகை
யாதகனலே போகாதபுனலே யுள் வேகாதகாலே, கொய்
யாதநறுமலரே கோவாதமணியே குளியாதபெருமுத்தே
வொளியாதவெளியே, செய்யாதபேருதவி செய்தபெரு
ந்தகையே தெய்வநடத்தரசே யென்சிறுமொழியேற்றரு
ளே (௧௦௧)

கொடுத்திடநானெடுத்திடவுங் குறையாதநிதியே கொ
ல்லாதநெறியே சித்தெல்லாஞ்செய்பதியே, மடுத்திடவு
மடுத்தடுத்தே மடுப்பதற்குள் ளாசைவைப்பதன்றி வெறு
ப்பறியா வண்ணநிறையமுதே, யெடுத்தெடுத்துப்போற்றுகினு
மியலுலவா வொளியேயென்னுயிரேயென்னுயிருக்கிசை

ங்கபெருந்துணையே, தடுத்திட வல்லவரில்லாத்தனி முதற்பேறரசே தாழ்மொழியென்றிகழாதே தரித்துமகிழ்ந்தருளே. (௰௫)

தனித்தனிமுக்கனிபிழிந்து வடித்தொன்றாய்க்கூட்டிச்சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக்கலந்தே, தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலுந் தேங்கின்றனிப்பாலுஞ்சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி, இனித்தநறு நெய்யளைந்தே யிளஞ்சூட்டிறக்கியெடுத் தசுவைக்கட்டியினு மினித்திடுந்தெள்ளமுதே, அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத்தரசேயடிமலர்க்கென் சொல்லணியாமலங்கணிந்தருளே, (௰௬)

மலைவறியாப்பெருஞ்சோதி வச்சிரமாமலையேமாணிக்கமணிப் பொருப்பே மரகதப்போர்வையே, விலையறியாவுயராணிப்பெருமுத்துத்திரளே விண்ணவருங்கண்ணுருமோர் மெய்ப்பொருளின் விளைவே, கொலையறியாக்குணத்தோர் தங் கூட்டுறவேயருட்செங்கோல், நடத்துகின்றதனிக்கோவேமெய்யறிவால், நிலையறிந்தோர்போற்றுமணிமன்றிநடத்தரசே நின்னடிப்பொன்மலர்களுக்கென் னெடுஞ்சொலணிந்தருளே, (௰௭)

கண்களிக்கப்புகைசிறிதுங் காட்டாதே புருவக்கலைநடுவேவிளங்குகின்றகற்பூரவிளக்கே, பண்களிக்கப்பாடுகின்றபாட்டில்விளைசுகமேபத்தருளேதித்திக்கப்பழுத்த தனிப்பழமே, மண்களிக்கவான்களிக்க மணத்தசிவகாம வல்லியென்மங்கையொளாம் வாழ்த்துகின்றவாமப்பெண் க

ளிக்கப்போதுநடஞ்செய்நடத்தரசேநினதுபெரும்புகழ்ச்சேவடிகளுக்கென்னரும்புமணிந்தருளே, (கஅ)

உருவெளியேயுருவெளிக்குள்ளுற்றவெளியுருவேயுருநடுவும் வெளிநடுவமொன்றானவொன்றே,பெருவெளியே பெருவெளியிற் பெருஞ்சோதிமயமேபெருஞ் சோதிமயநடுவேவிறங்குதனிப்பொருளே,மருவொழியா மலரகத்தேவயங்குமொளிமணியே மந்திரமேதந்திரமே மதிப்பரியாமருந்தே,திருவொழியா தோங்குமணிமன்றிநடத்தரசே சிறுமொழியென்றிகழாதேசேர்த்துமகிழ்ந்தருளே. (கசு)

கல்லார்க்குங்கற்றவர்க்குங்களிப்பருளுங் களிப்பேகாணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங்கண்ணே, வல்லார்க்குமாட்டார்க்கும் வரமளிக்கும்வரமே மதியார்க்குமதிப்பவர்க்குமதிகொடுக்குமதியே,நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்றநடுவேநரர்களுக்குஞ்சுரர்களுக்கு நலங்கொடுக்குநலமே,எல்லார்க்கும்பொதுவில்நடமிடுகின்றசிவமேயென்னரசேயான்புகலு மிசையுமணிந்தருளே,

எண்ணுதமந்திரமே யெழுதாதமறையேயேறாத மேனிலைநின்றிறங்காதநிறையே, பண்ணுத பூசையிலேயடியாதபடிப்பே பாராதபார்வையிலேயறியாதவறிப்பே நண்ணுதமனத்தகத்தேயண்ணுதநலமேநாடாத நாட்டகத்தேநடவாதநட்பே, அண்ணுமென்னப்பா வென்னையாவென்னரசேயடியிணைக்கென் சொன்மாலையணிந்துமகிழ்ந்தருளே. (உ0)

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# திருவருட்பிரகாசவள்ளலார்
என்னும்
# சிதம்பரம்-இராமலிங்கசுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய
# திருவருட்பாசுரம்

---

இஃது
சரவணபுரம்
சண்முகமுதலியாரவர்களால்
பார்வையிடப்பட்டு

---

இவை
சிதம்பரம்
புஸ்தகவியாபாரம்
வே. சுந்தரம்பிள்ளை வேண்டுகோளின்படி

---

விவேகவிளக்கவச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

தாரண௵.



உ

சிவமயம்.

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்-இராமலிங்கசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவருட்பாசுரம்.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கிழக்குவெளுத்ததுகருணையருட்சோதியுதயங்
  கிடைத்ததெனதுளக்கமலங்கிளர்ந்ததெனதகத்தே
சழக்குவெளுத்ததுசாதியாசிரமாசாரஞ்
  சமயமதாசாரமெனச்சண்டையிட்டேயுழலும்
வழக்குவெளுத்ததுபலவாம்பொய்ந்நூல்கற்றவர்தம்
  மனம்வெளுத்துவாய்வெளுத்துவாயுறவாதித்த
முழக்குவெளுத்ததுசிவமேபொருளெனுஞ்சன்மார்க்க
  முழுநெறியிற்பரநாதமுரசுமுழங்கியதே. (க)

நாதரருட்பெருஞ்சோதிநாயகரென்றனையே
  நயந்துகொண்டதனித்தலைவர்ஞானசபாபதியார்
வாதநடம்புரிகருணைமாநிதியார்வரதர்
  வள்ளலெலாம்வல்லவர்மாநல்லவரென்னிடத்தே

காதலுடன்வருகின்றாரொன்றுபரநாதங்
களிப்புறவேதொனிக்கின்றவந்தரதுந்துபிதான்
ஏதமறமுழங்குகின்றதென்றுசொல்லிக்கொண்டே
யெழுகின்றாடொழுகின்றாளென்னுடையமகளே.(௨)

உழக்கறியீரளப்பதற்கோவுளவறியீருலகீ
ரூரறியீர்பேரறியீருண்மையொன்றுமறியீர்
கிழக்கறியீர்மேற்கறியீரம்பலத்தேமாயைக்
கேதமறநடிக்கின்றபாதமறிவீரோ
வழக்கறிவீர்சண்டையிட்டேவம்பாக்கவறிவீர்
வடிக்குமுன்னேசோறெடுத்துவயிற்றடைக்கவறிவீர்
குழக்கறியேபழக்கறியேகூட்டுவர்க்கக்கறியே
குழம்பேசாறேயெனவுங்கூறவறிவீரே. (௩

இணக்கறியீரிதமறியீரிருந்தநிலையறியீ
ரிடமறியீர்கடமறியீரிவ்வுடம்பையெடுத்த
கணக்கறியீர்வழக்கறியீரம்பலத்தேமாயைக்
கலக்கமறநடிக்கின்றதுலக்கமறிவீரோ
பிணக்கறிவீர்புரட்டறிவீர்பிழைசெயவேயறிவீர்
பேருணவைப்பெருவயிற்றுப்பிலத்தினிடவறிவீர்
மணக்கறியேபிணக்கறியேவறுப்பேயோர்பொரிப்பே
வடைக்குழம்பேசாறேயென்றடைக்கவறிவீரே. (௪

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எழுவினும்வலியமனத்தினேன்மலஞ்சா
றீயினுநாயினுமிழிந்தேன்
புழுவினுஞ்சிறியேன்பொய்விழைந்துழல்வேன்
புன்மையேன்புலைத்தொழிற்கடையேன்
வழுவினும்பெரியேன்மடத்தினும்பெரியேன்
மாண்பிலாவஞ்சகநெஞ்சக்
குழுவினும்பெரியேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௧)

கற்றமேலவர்தம்முறவினைக்கருதேன்
கலகர்தம்முறவினிற்களித்தேன்
உற்றமேதகவோருவட்டுறவிருந்தே
னுலகியற்போகமேயுவந்தேன்
செற்றமேவிழையுஞ்சிறுநெறிபிடித்தேன்
தெய்வமொன்றெனுமறிவறியேன்
குற்றமேயுடையேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௨)

கடுமையேன்வஞ்சக்கருத்தினேன்பொல்லாக்
கன்மனக்குரங்கனேன்கடையேன்
நெடுமையாண்பனைபோல்நீற்றவெற்றுடம்பே
னீசனேன்பாசமேயுடையேன்
நடுமையொன்றறியேன்கெடுமையிற்றிளைத்தே
னச்சுமாமரமெனக்கிளைத்தேன்

கொடுமையேகுறித்தேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௩)

நிலத்திலும்பணத்துநீள்விழிமடவார்
நெருக்கிலும்பெருக்கியேபிணிப்பேன்
புலத்திலும்புரைசேர்பொறியிலுமனத்தைப்
போக்கிவீண்போதுபோக்குறுவேன்
நலத்திலோரணுவுநண்ணிலேன்கடையா
நாயினுங்கடையனேனவையேன்
குலத்திலுங்கொடியேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௪)

செடிமுடிந்தலையுமனத்தினேன்றுன்பச்
செல்லினலரிப்புண்டசிறியேன்
அடிமுடியறியுமாசைசற்றறியே
னறிந்தவர்தங்களையடையேன்
படிமுடிவழித்துக்கடிகொளுங்கடையர்
பணத்திலுங்கொடியனேன்வஞ்சக்
கொடிமுடிந்திடுவேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே (௫)

அரங்கினிற்படைகொண்டுயிர்க்கொலைபுரியு
மறக்கடையவரினுங்கடையேன்
இரங்கிலோர்சிறிதுமிரக்கமுற்றறியே
னியலுறுநாசியிற்கிளைத்த
சிரங்கினிற்கொடியேன்சிவநெறிபிடியேன்
சிறுநெறிச்சழக்கையேசிலுகுங்

குரங்கெனப்பிடித்தேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௬)

வாட்டமேயுடையார் தங்களைக்காணின்
மனஞ்சிறிதிரக்கமுற்றறியேன்
கோட்டமேயுடையேன் கொலையனேன் புலையேன்
கூற்றினுங்கொடியனேன் மாயை
யாட்டமேபுரிந்தேனறத்தொழில்புரியே
னச்சமுமவலமுமியற்றுங்
கூட்டமேவிழைந்தேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௭)

கலைத்தொழிலறியேன் கள்ளுணுங்கொடியேன்
கறிக்குழலுயினுங்கடையேன்
விலைத்தொழிலுடையேன் மெய்யெலாம்வாயாய்
விளம்புறும்வீணனேன்சுத்தப்
புலைத்தொழில்புரிவேன்பொய்யனேன்சீற்றம்
பொங்கியமனத்தினேன்பொல்லாக்
கொலைத்தொழில்புரிவேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௮)

பணமிலார்க்கிடுக்கண்புரிந்துணுஞ்சோற்றுப்
பணம்பறித்துழல்கின்றபடிறேன்
எணமிலார்கடுத்தார்க்குறுபெருந்தீமை
யியற்றுவேனெட்டியேயனையேன்
மணமிலாமலரிற்பூத்தனனிருகான்
மாடெனத்திரிந்துழல்கின்றேன்

குணமிலாக்கொடியேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௯)

கடியரிற்கடியேன்கடையரிற்கடையேன்
கள்வரிற்கள்வனேன்காமப்
பொடியரிற்பொடியேன்புலையரிற்புலையேன்
பொய்யரிற்பொய்யனேன்பொல்லாச்
செடியரிற்செடியேன்சினத்தரிற்சினத்தேன்
தீயரிற்றீயனேன்பாவக்
கொடியரிற்கொடியேனம்பலக்கூத்தன்
குறிப்பினுக்கென்கடவேனே. (௰)

---

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அணிவளர்திருச்சிற்றம்பலத்தாடு
மானந்தபோகமேயமுதே
மணிவளரொளியேயொளியினுள்ளொளியே
மன்னுமென்னுருயிர்த்துணையே
துணிவுறுசித்தாந்தப்பெரும்பொருளே
தூயவேதாந்தத்தின்பயனே
பணிவுறுமுளத்தேயினித்தினித்தெனக்கே
பழுத்தபேரானந்தப்பழமே. (௧)

திருவளர்திருச்சிற்றம்பலத்தாடுந்
தெய்வமேமெய்ப்பொருட்சிவமே
உருவளரொளியேயொளியினுள்ளொளியே
யோங்குமென்னுயிர்ப்பெருந்துணையே

ஒருதனித்தலைமையருள்வெளிநடுவே
யுவந்தரசாள்கின்றவரசே
பருவரணீக்கிச்சுவையளித்தெனக்கே
பழுத்தபேரானந்தப்பழமே. (௨)

துதிவளர்திருச்சிற்றம்பலத்தாடுஞ்
சோதியுட்சோதியேயென்று
மதிவளர்மருந்தேமாணிக்கமலையே
மன்னியவச்சிரமணியே
கதிதருதுரியத்தனிவெளிநடுவே
கலந்தரசாள்கின்றகளிப்பே
பதிவுறுமுளத்தேயினிக்கினித்தெனக்கே
பழுத்தபேரானந்தப்பழமே. (௩)

சீர்வளர்திருச்சிற்றம்பலத்தாடுஞ்
செல்வமேயென்பெருஞ்சிறப்பே
நீர்வளர்நெருப்பேநெருப்பினுள்ளொளியே
நிறையொளிவழங்குமோர்வெளியே
ஏர்தருகலாந்தமாதியாறந்தத்
திருந்தரசாள்கின்றவிறையே
பாருறுமுளத்தேசுவைகொடுத்தெனக்கே
பழுத்தபேரானந்தப்பழமே. (௪)

உரைவளர்திருச்சிற்றம்பலத்தாடு
மொள்ளியதெள்ளியவொளியே
வரைவளர்மருந்தேமறைமந்திரமே
மந்திரத்தார்பெறுமணியே

நிறைதருசுத்தநிலைக்குமேனிலையில்
நிறைந்தரசாள்கின்றநிதியே
பறையுறுமுளத்தேதமிகவினித்தெனக்கே
பழுத்தபேரானந்தப்பழமே. (ரு)

மேல்வளர்திருச்சிற்றம்பலத்தாடு
மெய்யறிவானந்தவிளக்கே
கால்வளர்கனலேகனல்வளர்கதிரே
கதிர்நடுவளர்கின்றகலையே
ஆலுறுமுபசாந்தப்பரவெளிக்கப்
பாலரசாள்கின்றவரசே
பாலுறுமுளத்தேநண்ணியிங்கெனக்கே
பழுத்தபேரானந்தப்பழமே. (சு)

இசைவளர்திருச்சிற்றம்பலத்தாடு
மின்பமேயென்னுடையன்பே
திசைவளரண்டகோடிகளனைத்துந்
திகழுறத்திகழ்கின்றசிவமே
இசைவுறுமௌனவெளிகடந்ததன்மே
லிருந்தரசாள்கின்றபதியே
பசைதருமுளத்தேசுவைபெறவெனக்கே
பழுத்தபேரானந்தப்பழமே. (எ)

அருள்வளர்திருச்சிற்றம்பலத்தாடு
மருட்பெருஞ்சோதியேயெனது
பொருள்வளரறிவுக்கறிவுதந்தென்னைப்
புறம்விடாதாண்டமெய்ப்பொருளே

மருவுமோர்நாதவெளிக்குமேல்வெளியில்
 மகிழ்ந்தரசாள்கின்றவாழ்வே
பருவராணீக்கிச்சுவைகொடுத்தெனக்கே
 பழுத்தபேரானந்தப்பழமே. (௯)

வான்வளர்திருச்சிற்றம்பலத்தாடு
 மாப்பெருங்கருணையெம்பதியே
ஊன்வளருயிர்கட்குயிர்தரவெல்லா
 வுலகமுநிறைந்தபேரொளியே
மான்முதன்மூர்த்திமாணிலைக்கப்பால்
 வயங்கியவெளிநடுவரசே
பான்மையுள்ளகத்தேயினித்தினித்தெனக்கே
 பழுத்தபேரானந்தப்பழமே. (௧௦)

தலம்வளர்திருச்சிற்றம்பலத்தாடுந்
 தனித்தமெய்ப்பொருட்பெருஞ்சிவமே
நலம்வளர்கருணைநாட்டம்வைத்தெனையே
 நண்புகொண்டருளியநண்பே
வலமுறுபாநாதாந்தமேனிலையில்
 மகிழ்ந்தரசளிக்கின்றமகிழ்வே
பலமுறமுளத்தேயினித்தினித்தெனக்கே
 பழுத்தபேரானந்தப்பழமே. (௰௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவங்கனிந்தசிற்றம்பலத்தருணடஞ்
    செய்கின்றபெருவாழ்வே
நவங்கனிந்தமேனிலைநடுவிளங்கிய
    நண்பனேயடியேன்றன்
றவங்கனிந்ததோர்விண்ணப்பந்திருச்செவி
    தரித்தருள்புரிந்தாயே
பவங்கனிந்தவிவ்வடிவழிவுறாதருட்
    பதிவடிவுறுமாறே. (௧)

விளங்குகின்றசிற்றம்பலத்தருணடம்
    விளைக்கின்றபெருவாழ்வே
களங்கமில்லதோருளநடுவிளங்கிய
    கருத்தனேயடியேனுன்
விளம்பியின்றதோர்விண்ணப்பந்திருச்செவி
    வியந்தருள்புரிந்தாயே
உளங்கொளிவ்வடிவிம்மையேமந்திர
    வொளிவடிவுறுமாறே. (௨)

விஞ்சுகின்றசிற்றம்பலத்தருணடம்
    விளைக்கின்றபெருவாழ்வே
எஞ்சலற்றமாமறைமுடிவிளங்கிய
    வென்னுயிர்த்துணையேநா
னஞ்சலின்றியேசெய்தவிண்ணப்பமேற்
    றகங்களித்தளித்தாயே
துஞ்சுமிவ்வுடலழிவுறாதோங்குமெய்ச்
    சுகவடிவுறுமாறே. (௩)

ஓங்குகின்றசிற்றம்பலத்தருணட
மொளிர்கின்றபெருவாழ்வே
தேங்குலாவியதெள்ளமுதேபெருஞ்
செல்வமேசிவனேநின்
பாங்கனேன்மொழிவிண்ணப்பந்திருச்செவி
பதித்தருள்புரிந்தாயே
ஈங்குவீழுடலென்றும்விழாதொளி
ரியல்வடிவுறுமாறே. (௪)

இலங்குகின்றசிற்றம்பலத்தருணட
மிடுகின்றபெருவாழ்வே
துலங்குபேரருட்சோதியேசோதியுட்
டுலங்கியபொருளேயென்
புலங்கொள்விண்ணப்பந்திருச்செவிக்கேற்றருள்
புரிந்தனையிஞ்ஞான்றே
அலங்குமிவ்வுடலென்றுமிங்கழிவுறா
தருள்வடிவுறுமாறே. (௫)

சிறந்தபேரொளித்திருச்சிற்றம்பலத்திலே
திகழ்கின்றபெருவாழ்வே
துறந்தபேருளத்தருட்பெருஞ்சோதியே
சுகப்பெருநிலையோனே
மறந்திடாதுசெய்விண்ணப்பந்திருச்செவி
மடுத்தருள்புரிந்தாயே
பிறந்தவிவ்வுடலென்றுமிங்கழிவுறாப்
பெருமைபெற்றிடுமாறே. (௬)

வயங்குகின்றசிற்றம்பலந்தன்னிலே
வளர்கின்றபெருவாழ்வே
மயங்குறாதமெய்யறிவிலேவிளங்கிய
மாமணிவிளக்கேயிங்
கியங்குசிற்றடியேன்மொழிவிண்ணப்ப
மேற்றருள்புரிந்தாயே
தயங்குமிவ்வுடலெற்றைக்குமழிவுறாத்
தனிவடிவுறுமாறே. (எ)

தீட்டுகின்றசிற்றம்பலத்தருணடஞ்
செய்கின்றபெருவாழ்வே
காட்டுகின்றதோர்கதிர்நடுவிளங்கிய
கடவுளேயடியேனுன்
நீட்டுகின்றதோர்விண்ணப்பந்திருச்செவி
நிறைத்தருள்புரிந்தாயே
சூட்டுமிவ்வுடலென்றுமிங்கழிவுறாப்
பொன்வடிவுறுமாறே. (அ)

தடையிலாதசிற்றம்பலத்தருணடந்
தழைக்கின்றபெருவாழ்வே
கடையிலாப்பெருங்கதிர்நடுவிளங்கிய
கடவுளேயடியேனுன்
இடையுறாதுசெய்விண்ணப்பந்திருச்
செவிக்கேற்றருள்புரிந்தாயே
புடையிலிவ்வுடலென்றுமிங்கழிவுறாப்
பொன்வடிவுறுமாறே. (௯)

கையிநெல்லிபோல்விளங்குசிற்றம்பலங்
கலந்தருள்பெருவாழ்வே
மெய்யிலேவிளங்தோங்கியபோகமே
மெய்ப்பெரும்பொருளேயான்
ஐயமற்றுனைவிண்ணப்பமுவந்
தருளளித்தனையிஞ்ஞான்றே
செய்யுமிவ்வுடலென்றுமிங்
கழிவுறாச்சிவவடிவுறுமாறே. (௰)

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

செய்வகையறியேன்மன்றன்மாமணிநின்
றிருவுளக்குறிப்பையுந்தெரியேன்
உய்வகையறியேனுணர்விலேனந்தோ
வுறுகண்மேலுறுங்கொலென்றுலைந்தேன்
மெய்வகையடையேன்வேறெவர்க்குரைப்பேன்
வினையனேனென்செயவிளைகேன்
பொய்வகையுடையேனெங்ஙனம்புகுவேன்
புலையனேன்புகலறியேனே. (௧)

அறிவிலேனறிந்தார்க்கடிப்பணிபுரியே
னச்சமுமவலமுமுடையேன்
செறிவிலேன்பொறுவாந்தெய்வநீநினது
திருவுளத்தெனைநினையாயேல்
எறிவிலேன்சிறியேனெங்ஙம்புகுவே
னென்செய்வேன்யார்துணையென்பேன்
பிறிவிலேன்பிரிந்தாலுயிர்தரிக்கில்லேன்
பிழைபொறுத்தருள்வதுன்கடனே. (௨)

உன்கடனடியேற்கருளலென்றுணர்ந்தே
னுடல்பொருளாவியுமுனக்கே
பின்கடனின்றிக்கொடுத்தனன்கொடுத்த
பின்னுநான்றளருதலழகோ
என்கடன்புரிவேன்யார்க்கெடுத்துரைப்பே
னென்செய்வேன்யார்துணையென்பேன்
முன்கடன்பட்டாற்போன்மனங்கலங்கி
முறிதலோர்கணந்தறியேனே. (௩)

தரித்திடேன்சிறிதுந்தரித்திடேனெனது
தளர்ச்சியுந்துன்பமுந்தளர்ந்தேன்
தெரித்திடலனைத்துந்தெரித்திடவேண்டுந்
தெரித்திடாயெனிலிடரனைத்தான்
எரித்திடமந்தோவென்செய்வேனெங்கே
யெய்துகேனார்துணையென்பேன்
திரித்தநெஞ்சகத்தேன்சரித்திரமனைத்துந்
திருவுளந்தெரிந்ததுதானே. (௪)

தானெனைப்புணருந்தருணமீதெனவே
சத்தியமுணர்ந்தனன்றனித்தே
தேனுறக்கருதியிருக்கின்றேனிதுநின்
றிருவுளந்தெரிந்ததுதானே
ஆனெனக்கூவியணைத்திடல்வேண்டு
மரைக்கணமாயினுந்தாழ்க்கில்
நானிருப்பறியேன்றிருச்சிற்றம்பலத்தே
நடம்புரிஞானநாயகனே. (௫)

திருவருட்பாசுரம்-முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம்

# இராமலிங்கப்பிள்ளையவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# பத்திமாலையும்

## கீர்த்தனையும்

இஃது

சிதம்பரம்

வே. மாணிக்கம்பிள்ளை வேண்டுகோளின்படி

சி. சபாபதிபிள்ளை அவர்களால்

இஃது.


சரவணபுரம்.

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு

புரசபாக்கம்.

ஏழுமலைப்பிள்ளையவர்களது.

விவேகவிளக்கவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சித்திரபானு௵,



உ

திருச்சிற்றம்பலம்.

# பத்திமாலை



## எண்சீர்க்கழிநெடிலடி-யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

அருளுடையாயடியேனை யருமையறிந் தறியாதே மறுத்தபிழை யத்தனையும் பொறுத்து, மருளுடையேன் றனையழைத்துத் திரும்பவுமென் கரத்தே மகிழ்ந்தளித்த பெருங்கருணை வண்ணமென்றன் மனமுந், தெருளுடைய கண்களும்விட் டகலாதே யின்னுந் தெரிகின்றதாயினுமென் சிந்தையுருகிலதே, யிருளுடைய சிலையுமிதற் குருகலரிதலவே யினித்தநடம் புரிந்துமன் றிற்றனித்தசிவக்கொழுந்தே, (௧)

அன்புடையாயடியேனை யருளருமையறியேனை யறியாதே மறுத்தபிழை யத்தனையும் பொறுத்து, வன்புடையேன் றனையழைத்துத் திரும்பவுமென் கரத்தே வலிந்தளித்த பெருங்கருணை வண்ணமென்றன் மனமும், மின்புடைய கண்களும்விட் டகலாதேயின்னும் விளங்குகின்றதாயினுமென் வெய்யமனமுருகா, வெ

ன்புடையவுடனுமிதற் குருகலரிதலவே யினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௨)

ஆளுடையாய்சிறியேனுனருளருமையறியேனறியாதே மறுத்தபிழையத்தனையும்பொறுத்து, வாளுடையென்றனையழைத்துத் திரும்பவுமென்கரத்தேவலைந்தளித்தபெருங்கருணை வண்ணமென்றன்மனமும், நீளுடையகண்களும்விட்டகலாதேயின்னு நிகழ்கின்றதாயினுமென்னெஞ்சமுருகிலதே, வளுடையமலையுமிதற்குருகலரிதலவே யினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே, (௩)

ஆரமுதேயடியேனுனருளருமையறியே னறியாதேமறுத்தபிழையத்தனையும்பொறுத்து, வாரமுறவெனையழைத்துத் திரும்பவுமென்கரத்தே மகிழ்ந்தளித்தபெருங்கருணை வண்ணமென்றன்மனமுஞ், சீருடையகண்களும்விட்டகலாதேயின்னுந் தெரிகின்றதாயினுமென்சிந்தையுருகிலதே. பேரமிலாவாரமுமிதற் குருகலரிதலவே யினித்தநடம்புரிந்துமன்றிற் றனித்தசிவக்கொழுந்தே (௪)

அற்புதநின்னருளருமை யறியேனன்றியுமறியாதேமறுத்தபிழை யாயிரமும்பொறுத்து, வற்புறு

வென்றனையழைத்துத்திரும்பவுமென்கரத்தே வலி,
தளித்தபெருங்கருணை வண்ணமென்றன்மனமுருகி,
ற்புடையகண்களும்விட்டகலாதேயின்னுங் கான்
ன்றதென்னினுமென்கன்மனமோவுருகா, விற்புடை
யவிரும்புயிதற்குருகலரிதலவேயினித்தநடம்புரிந்
மன்றிற் றனித்தசிவக்கொழுந்தே. (௫

ஆண்டவநின்னருளருமை யறியாதேயிருந்தேனை
ன்றிரவின்மறுத்தபிழை யத்தனையும்பொறுத்து, மே
ண்டினனையருகழைத்துத்திரும்பவுமென்கரத்தே பெ
வளித்தவருள்வண்ணம் வினையுடையேன்மனமுரு
கான்டகையகண்களும்விட்ட டகலாதேயின்னுங்க
ன்கின்றதாயினுமென்கருத்துருகக்காணே, னின்று
ருகாக்கரடியிதற்குருகலரிதலவே யினித்தநடம்புரி
துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௬

அரசேநின்றிருவருளினருமையொன்றுமறியேனை
றியாதேமறுத்தபிழையத்தனையும்பொறுத்து, விரவுமு
ன்பிலேனையழைத்துவலியவுமென்கரத்தேவலியத்தளி
த்தபெருங்கருணைவிளக்கமென்றன்மனமுரு, முரவுமல
லர்க்கண்களும்விட்ட டகலாதேயின்னுமொளிர்கின்ற
தாயினுமென்னுள்ளமுருகிலதே, யிரவுபிறந்தவருபி

தற்குருகலரிதலவேயிளித்தநடம்புரிந்துமன்றிற்றனி
த்தசிவக்கொழுந்தே (௭)

ஐயாநின்னருட்பெருமை யருமையொன்றுமறி
யேனறியாதேமறந்தபிழை யத்தனையும்பொறுத்து,
மெய்யவன்றனையழைத்துவளியவுமென்கரத்தே வி
யந்தளித்தபெருங்கருணைவிளக்கமென்றன்மனமுங்,
கையாதுகண்கரும்பிட் டகலாதேயின்றுங்காண்கி
ன்றதாயினுமென்கருத்துருகக்காணே, னையாவன்
பாலுமிதம்குருகலரிதலவேயிளித்தநடம்புரிந்துமன்
றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௮)

அப்பாநின்றிருவருட்பே ரமுதருமையறியேனே
ன்றிரவின்மறந்தபிழையத்தனையும்பொறுத்து, விட்
பாரிலெனையழைத்துவலியவுமென்கரத்தே யினிதளி
த்தபெருங்கருணையின்பமென்றன்மனமுந், துப்பா
யகன்கரும்பிட் டகலாதேயின்றுந் தோன்றுகின்ற
தாயினுமித்தட்டநெஞ்சமுருகா, வெப்பாவிநெஞ்
சமிதம்குருகலரிதலவேயிளித்தநடம்புரிந்துமன்றிற்
றனித்தசிவக்கொழுந்தே. (௯)

அம்மாநின்னருட்சத்தி யருண்மையொன்றுமறியே
னன்றிரவின் மறந்தபிழையத்தனையும்பொறுத்து,

வெம்மாயையகற்றியெனை யருகழைத்தென்கரத்தே
மிகவளித்தபெருங்கருணைவிளக்கமென்றன்மனமும்,
மைம்மாழைவிழிகளும்விட்டகலாதேயின்னும் வறி
கின்றதாயினுமென்வஞ்சநெஞ்சமுருகா; வெம்மாய
நெஞ்சமிதற்குருகலரிதலவே யினித்தநடம்புரிக்கும
ன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௰)

பத்திமாலை-முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்,

கீர்த்தனை-இ-ம்-தோடி-ஆதிதாளம்,

பல்லவி

தெண்டனிட்டேனென்றுசொல்லடி ஸ்வாமிக்குநான்
தெண்டனிட்டேனென்றுசொல்லடி.

அநுபல்லவி,

தண்டலைவிளங்குந்தில்லைத்தலத்திற் பொன்னம்பல
த்தே கண்டவர்மயங்கவேடங்கட்டிய டுகின்றவர்க்கு
தெண்ட

சரணங்கள்,

கற்பூரவாசம்வீசும்பொற்பாந்திருமுகத்தே
கனிந்தபுன்னகையாடக்கருணைக்கடைக்கணோட
அற்பார்பொன்னம்பலத்தேயாநந்தத்தாண்டவ
மாடிக்கொண்டேயென்னையாட்டங்கண்டாருக்கு
தெண்ட.

இழிந்தாலும்நம்மையிங்கே த்றுவாரொன்றடைந்தா
ல், வற்றுவார்போலேயின்று பிழியவைப்பாருக்
குப், பழுத்தநழு.விமெல்லப்பாலில்விழுந்ததென்ன
ப், பசப்பிப்பசப்பியன்பர்பண்டம்பறிப்பவர்க்கு
தெண்ட.

சுட்டதிருநீறுபூசித்தொந்தோமென்றாடுவார்க்குத்
தோன்றுதலை மாலையணிதோள் விளங்கவருவார்க்
குப், பிட்டுக்காசைப்பட்டுமாறன்பிரம்படிபட்டவ
ர்க்குப், பிள்ளைக்கறிக்காசைகொண்ட கள்ளத்தவ
வேடருக்கு, தெண்ட

வாழ்ந்தாரைமேன்மேலும்வாழச்செய்பவருக்கு
மாசுபறித்தவர்கையிற்காசுபறிக்கின்றவர்க்குத்
தாழ்ந்தாரையடிக்கடிதாழக்காண்பவருக்குத்
தாறுமாறாகித்தனியேநின்றவருக்கு.
தெண்ட,

ஆதியந்தநடுவில்லாவானந்தநாடருக்கு
அண்டருயிர்காத்தமணிகண்டசிவசண்டருக்குச்
சோதிமயமாய்விளங்குந்தூயவடிவாளருக்குத்
தொண்டர்குடிகெடுக்கவேதுஜங்கட்டிக்கொண்டவர்க்கு தெண்ட,

பாட்டுக்காசைப்பட்டுமுன்னம் பரவைதன்வாயிலி
ற்போய்,பண்புரைத்தத்தூதனென்றே பட்டங்கட்
டிக்கொண்டவர்க்கு, வீட்டுக்காசைப்படுவாரை
வீட்டைவிட்டுத்துரத்தியே வேட்டாண்டியாயுலகி
லோட்டாண்டியாக்குவார்க்கு.

தெண்ட,

தாம்வயிற்றிற்பிறவாதுதானேமுளைத்தவர்க்குச்
சாதிகுலமறியாதுதாண்டவஞ்செய்கின்றவர்க்கு
ஏயதொழிலருளுமென்பிராணநாயகர்க்கு
ஏமாந்தவரையெல்லாமேமாத்துமீசருக்கு
தெண்டனிட்டேனென்றுசொல்லடிசுவாமிக்குநான்
தெண்டனிட்டேனென்றுசொல்லடி.

திருச்சிற்றம்பலம்,

உ

திருச்சிற்றம்பலம்,

திருவருட்பிரகாசவள்ளலார்

என்னும்

சிதம்பரம்இராமலிங்கப்பிள்ளை

திருவாய்மலர்ந்தருளிய

# நடராஜபதிமாலை.

இஃது.

சிதம்பரம்

வே, சுந்தரம்பிள்ளைகேட்டுக்கொண்டபடி

இஃது சரவணபுரம்.

சண்முகமுதலியாரவர்களால்,

பார்வையிடப்பட்டு.

புரசைபாக்கம்.

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்கவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சித்திரபானுவருஷம்

உ

# திருச்சிற்றம்பலம்.

## நடராஜபத்து

அருணிலைவிளங்குஞ் சிற்றம்பலமெனுஞ்
சிவசுகாதீதவெளிநடுவிலே
யண்டபகிரண்டகோடிகளுஞ் சராசரமனைத்துமலைவ
யாக்கண்முதலாம்
பொருணிலைச்சத்தரொடு சத்திகதிகளனந்தமும்
பொற்பொடு விளங்கியோங்கப்
புறப்புறமகப்புறம் புறமகமிவற்றின்மேற்
பூரணாகாரமாகித்
தெருணிலைச்சச்சிதானந்த நிரணதிகள்
சிறப்பமுதலந்தமின்றித்
திகழ்கின்றமெஞ்ஞானசித்தியனுபவநிலை
தெளிந்திடவியங்குசுடரோ
கருநிலைக்குழலட்ஸமயானந்தவல்லிசிவ
சகிதரிக்கனியதுணையே
சுத்தசிவசன்மார்க்கநிதியே யருட்பெருஞ்
ஜோதிநடராஜபதியே, (௧)

என்னியலுடம்பிலே யென்பிலேயன்பிலே
யிதயத்திலே தயவிலே
என்னுயிரிலே யென்றனுயிரினுக்குயிரிலே
என்னியற்குணமதனிலே
இன்னியலென்வாக்கிலேயென்னுடையநாக்கிலே
யென்செவிப்புலத்திசையிலே
என்னிருகண்மணியிலே என்கண்மணியொளியிலே
யென்னனுபவந்தன்னிலே
தன்னியலென்னறிவிலே யறிவினுக்கறிவிலே
தானேகலந்துமுழுதுந்
தன்மயமதாக்கியே தித்தித்துமென்மேற்
றதும்பிநிறைகின்றவமுதே
துன்னியபெருங்கருணைவெள்ளமே
யழியாதசுகமே சுகாதீதமே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
சோதிநடராஜபதியே (௨)
உடலெலாமுயிரெலா முணர்வெலா
முள்ளனவெலாங்கலந்தே
ஒளிமயமதாக்கி யிருணீக்கியெக்காலத்து
முதயாஸ்தமானமின்றி
இடலெலாம்வல்லசிவசத்திகிரணங்கியாய்
ஏகமாய்யேகபோக

இன்பநிலையென்னுமொரு சிற்சபையினடுவே
யிலங்கிநிறைகின்றசுடரே
கடலெலாம்புவியெலாங்கனலெலாம்வளியெலாங்
ககனெலாங்கண்டபரமே
காணாதபொருளெனக்கலையெலாம்புகலவென்
கண்காணவந்தபொருளே
தொடலெலாம் பெறவெனக்குள்ளும்புறத்தும்
மெய்த்துணையாய் விளங்குமறிவே
சுத்தசிவசன்மார்க்கநிதியே யருட்பெருஞ்
சோதிநடராஜபதியே. (௫)

மெய்தழையருள்ளங்குளிர்ந்துவகைமாறாது
மென்மேற்கலந்துபொங்க
விச்சையறிவோங்க வெனிச்சையறிவனுபவம்
விளங்கவறிவறிவதாகி
உய்தழைவளர்ந்ததெலாம் வல்லசித்தாந்தத்
துவட்டாதுறைநிறுத்தி
யூற்றெழுந்தென்னையந் தானாக்கியென்னுளே
உள்ளபடியுள்ளவமுதே
கைதழையவந்தவான்கனியேயெலாங்கண்ட
கண்[illegible]ந்தநடுவே
கற்பனையிலா[illegible]ங்குசிற்சபாமணியே
கணிப்பருங்கருணைநிறைவே

ஆய்தலைமுரப்பயித் தலைமுத்ததரிலேயருட்
சுகபோகயோகவுருவே
சுத்தசிவசன்மார்க்கநிதியே யருட்பெருஞ்
ஜோதிநடராஜபதியே. (௪)

எண்ணிலாவண்டபகிரண்டத்தின்முதலிலே
யிடையிலேகடையிலேமேல்
ஏற்றத்திலேயவையுளேற்றத்திலேதிரண்
டெய்துவடிவத்தன்னிலே
கண்ணுறுமருவிலேயுருவிலேகுருவிலே
கருவிலேதன்மைதனிலே
கலையாதிநிலையிலேசத்திசத்தாகிக்
கலந்தோங்குகின்றபொருளே
தெண்ணிலாக்காந்தமணிமேடைவாய்க்
கோடைவாய்ச்சேர்ந்தனுபவித்தசுகமே
சித்தெலாஞ்செயவல்ல தெய்வமேயென்மனத்
திருமாளிகைநிடமே
துன்னுறுசாந்தசிவ ஞானிகளுளத்தே
சுதந்தரித்தெளிசெய்யொளியே
சுத்தசிவசன்மார்க்கநிதியே யருட்பெருஞ்
ஜோதிநடராஜபதியே. (௫)

அம்புவியிலேபுவியி னடியிலேமுடியிலே
யம்மண்டலந்தன்னிலே

அகிலத்திலேபுவியி லகிலத்திலேயவைக்
கானவடிவாதிதனிலே
விம்பமுறவேநிறைந் தாங்கவைநிகழ்த்திட
விளக்குமவையவையாகியே
மேலுமவையவையாகி யவையவையலாதவொரு
மெய்ந்நிலையுமானபொருளே
தம்பமிசையெனையேற்றியமுதூற்றியழியாத்
தலத்திலுறவைத்தவரசே
சாகாதவித்தைக்கிலக்கணமிலக்கியந்
தானாயிருந்தபரமே
தொம்பதமுமுடனுற்றதற்பதமுமசிபதச்
சுகமுமொன்றானசிவமே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்
ஜோதிநடராஜபதியே

நீரிலேநீருற்றநிறையிலேநிறையுற்ற
நிலையிலேநுண்மைதனிலே
நிகழ்விலேநிகழ்வுற்றநிகழ்விலேநிழலிலே
நெகிழிலேதண்மைதனிலே
ஊரிலேயந்நீரினுப்பிலேயுப்பிலுறு
மொண்சுவையிலேயொளியிலே

யுற்றநீர்க்கீழிலேமேலிலேநடுவிலே
    யுற்றியலுருத்துமொளியே
காரிலேயொருகோடிபொழியினுந்துணைபெறுக்
    கருணைமழைபொழிமேகமே
கனகசபைநடுநின்றகடவுளேசிற்சபைக்
    கண்ணோங்குமொருதெய்வமே
தூரிலேபலமளித்தூரிலேவளர்கின்ற
    சுகசொருபமானதருவே
சுத்தசிவசன்மார்க்கநிதியே யருட்பெருஞ்
    ஜோதிநடராஜபதியே. (அ)

ஒள்ளியநெருப்பிலேயுப்பிலேயொப்பிலா
    வொளியிலேசுடரிலேமே
லோட்டிலேகூட்டிலேயுள்ளாடுமோட்டிலே
    யுறுமாதியந்தத்திலே
தெள்ளியநிறத்திலேயருவத்திலேயெலாஞ்
    செயவல்லசெய்கைதனிலே
சித்தாய்விளங்கியுபசித்தாகியசத்திகள்
    சிறக்கவளர்கின்றவொளியே

வள்ளியசிவானந்தமலையேசுகாதீத
வானமேஞானமயமே
மணியேயென்னிருகண்ணுண்மணியே
யென்னுயிரே யென்வாழ்வேயென்வாழ்க்கை
துள்ளுயமனப்பேயையுள்ளுறவடக்கி (வைப்பே
மெய்ச்சுகமெனக்கீந்ததுணையே
சுத்தசிவசன்மார்க்கநிதியே யருட்பெருஞ்
ஜோதிநடராஜபதியே (அ)

திருச்சிற்றம்பலம்,



உ

கடவுட்டுணை.

இவை

# திருவருட்பிரகாசவள்ளலார்

என்னும்

சிதம்பரம்

# இராமலிங்கபிள்ளையவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

## நடராஜபதிசற்குருமணிமாலை.

## சிவகாமியம்மன்பேரில் அருட்பத்து.

---

இவைகளடங்கியிருக்கின்றது

ச. வரதராஜப்பிள்ளையவர்களால்

விவேகவிளக்கவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சித்திரபானு ௵





# அருட்பெருஞ்சோதி

## திருவருட்பிரகாசவள்ளலார்

## திருவாய்மலர்ந்தருளிய

## [illegible]

## சற்குருமணிமாலை

### வெண்பா

என்னறிவா மென்னறிவி னின்பமா மென்னறிவின்
றன்னறிவா முண்மைத் தனிநிலையாம் மன்னுமொளிச்
சோலையிட்டான் வாழச்சிவகாமசுந்தரியை
மாலையிட்டான் பாதமலர்.

### அறுசீர்க்கழிநெடில் விருத்தம்

மாற்றறியாதசெழும்பசும்பொன்னே மாணிக்கமே சுடர்வண்ணக்கொழுந்தே, கூற்றறியாத பெருந்தவருள்ளக் கோயிலிருந்த குணப்பெருங்குன்றே வேற்றறியாத சிற்றம்பலக்கனியே விச்சையில்வல்லவர் மெச்ச விருந்தே சாற்றறியாதவன் சாற்றுங்கனித்தான் தனிநடராஜவென் சற்குருமணியே. (௧)

கற்கணையும்படி கரைவிக்குங்கருத்தே கண்மணியே
மணிகலந்தகண்ணொளியே, சொற்கரையின் றியவொளி
யினுள்ளொளியேதுரியமுங்கடந்திட்டபெரியசெம்பொ
ருளே,சிற்கரைதிரையது திருவருட்கடலே தெள்ளமுதே
கனியேசெழும்பாகே, சர்க்கரையே யதுசார்ந்தசெந்தே
னேதனிநடராஜவென்சற்குருமணியே. (௨)

என்னுயிரேயெனதுயிர்க்குயிரேயென்னறிவே யெ
னதறிவினுக்கறிவே, அன்னையினினிய வென்னம்பலத்த
முதே வற்புதமேபதமே யெனதன்பே,பொன்னிணையடி
மலர்முடிமிசைப் பொருந்தப்பொருந்திய நவவுடைப்பு
ண்ணியப்பொருளே,தன்னியலறிவருஞ்சத்தியநிலையேத
னிநடராஜவென்சற்குருமணியே. (௩)

காய்மனக்கடையனைக்காத்த மெய்ப்பொருளே கலைக
ளுங்கருதருமொருபெரும்பதியே,தேய்மதிச்சடைமரு
க்கரியவொண்கடோசித்தெளிவெல்லதோர்சத்திய முத
லே,ஆய்மதிப்பெரியருள்ளமர்ந்தசிற்பரமே யம்பலத்தா
டல்செய்செம்பதத்தரசே, தாய்மதிப் பரியதோர் தயவு
டைச்சிவமே தனிநடராஜவென்சற்குருமணியே. (௪)
உருவமு மருவமு முபயமுமாதாயுளதிலதாயொ
ளியொருதனிமுதலே, கருவிலியெனக்கருள்கனித் தனி

த்தவனே கண்ணுடையாய்ப்பெருங்கடவுளர்பதியே, இ
ருநிலைபெறவெனைவளர்க்கின்ற பரமசிவகுருதுரியத்தி
ற்றெளியனுபவமே, கருவளர்பொழில்வடற்சபை நிறை
யொளியேதனிநடராஜவென்சற்குருமணியே (௫)

ஆறந்தநிலைகளினனுபவ நிறைவே யதுவதுவாயொளி
ர்பொதுவுறுநிதியே, கூறொந்நிலைகளுமொருநிலை யெனவே கூறியென்னுள்ளத்திற் குலவியகளிப்பே, பேறிந்த
நெறியெனக்காட்டியென்றனையே பெறுநெறிக் கேற்றிய
வொருபெரும்பொருளே, சாறெந்தநாள்களும் விளங்கு
மோர்வடல்வாய்த் தனிநடராஜவென்சற்குருமணியே.()

சாகாதலையிதுவேகாதகாலாந்தரமிதுகாணெனத் த
யவுசெய்துரைத்தே, போகாதபுனலையுந்தெரிவித் தென்
னுள்ளத்தே பொற்புறவமர்ந்தோரற்புதச்சுடரே, ஆகா
தபேர்களுக்காகாதவினையேயாகியவெனக்கென்று மாகிய
சுகமே, தாகாதலெனத்தருந்தருமசத்திரமே தனிநடரா
ஜவென்சற்குருமணியே. (௭)

தத்துவமசிநிலையிதுவிதுதானேசத்தியங்காணெனத்த
ளித்துரைத்தெனக்கே, எத்துவந்தனைகளுநீக்கிமெய் நிந்

லைக்கே யேற்றிகாணிறவாத வியலளித்தருளார், சித்தவங்
குலைக்களைவற்றிணுமாடச் செய்வித்தபோருக் சிவபர
ஞ்சுடரோ, சத்துவநெறிதருவடலருட் கடலேதனிநடராஜ
வென்சற்குருமணியே. (௮)

இதுபதியிதுபொருளிதுசுகமடைவா யிதுவழியென
வெனக்கியம்புற்றவுரைத்தே, திருவமுமொருசிவ வமுதமு
மளித்தே மேவிலைக்கேற்றியமெய்ந்நிலைச்சுடரோ, பொது
நடமிடுகின்ற புண்ணியப்பொருளே புனையுறுமுளத்தி
டைப்பொருந்தியமருந்தே, சதுமறைமுடிகளின் முடியு
றுசிவமே தனிநடராஜவென்சற்குருமணியே. (௯)

என்னிலையிது வென்னிலையிதுவா மிருநிலைகளு
மொருநிலையெனவறிவாய், முன்னிலைசிறிதுமிதுமயலு
றவாம் முன்னிலை பின்னிலை முழுநிலையுளவாம், இந்நி
லையறிந்தவனொருநிலைகடந்தே யிருநிலையடைகவென்றி
யம்பியபரமே, தன்னிலையாகியதன்னிலையரசே தனிநட
ராஜவென்சற்குருமணியே. (௰)

திருச்சிற்றம்பலம்.





உ

திருச்சிற்றம்பலம்

# சிவகாமவல்லியம்மன்பேரில்

## அருட்பத்து.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்

ஜோதிக்கொடியே யானந்தச் சொருபக்கொடியேஜோ
தியுருப்.பாதிக்கொடியேஜோதிபீடப்பாகக்கொடியேயெ
னையீன்ற,ஆதிக்கொடியே யுலகுகட்டி யாளுங்கொடி ய
சன்மார்க்க,நீதிக்கொடியேசிவகாமவிமலக்கொடியே யரு
ளுகவே. (க)

பொருணற்கொடியே மாற்றுயர்ந்த பொன்னங்கொடி
யே போதாந்த, வருணைக்கொடியே யெல்லாஞ்செய்வல்
லாரிடஞ்சேர்மணிக்கொடியே,தருணைக்கொடியே யென்
னைத் தாங்கியோங்குங் கனிக்கொடியே,கருணைக்கொடி
யே ஞானசிவ காமக்கொடியே யருளுகவே. (உ)

நீட்டுக்கொடியே சன்மார்க்க நீதிக்கொடியே சிவநிரு
ம்,பாட்டுக்கொடியே யிறைவரிடப்பாகக்கொடியே பா
நாத.காட்டுக்கொடியேயெனையீன்ற ஞானக்கொடியேயெ
ன்னுறவாங், கூட்டுக்கொடியேசிவ காமக்கொடியே யடி
யேற்கருளுகவே. (௩)

மாலக்கொடியேன் குற்றமெலாமன்னித்தருளிமாணை
மெனுஞ், ஜாலக்கொடியை யொடித்தெனக்குட் சார்ந்து
விளங்கும் தவக்கொடியே, காலக்கருவைக் கடந்தொளிர்
வான் கருவுங்கடந்து வயங்குகின்ற, கோலக்கொடியேசி
வஞானக் கொடியேயடியேற்கருளுகவே. (௪)

நாடாக்கொடிய மனமடக்கி நல்லமனத்தைக்களிவித்
துப், பாடாப்பிழையைப் பொறுத்தெனக்குப் பதமீந்தா
ண்ட பதிகொடியே, தேடாக்கருமச்சித்தியெலாந் திகழ
த்தயவாற் றெரிவித்த, கோடாக்கொடியேசிவதருமக்கொ
டியே யடியேற்கருளுகவே. (௫)

மணங்கொள்கொடிப்பூ முதனான்குவகைப்பூவடிவுள்
வயங்குகின்ற, வணங்கொள்கொடியே யைம்பூவும் மலிய
மலர்ந்த வான்கொடியே, கணங்கொள்யோக சித்தியெலா
ங்காட்டுங்கொடியே கலங்காத, குணங்கொள்கொடியே சி
வபோகக்கொடியேயடியேற்கருளுகவே. (௬)

புலங்கொள்கொடிய மனம்போனப் போக்கிற்போகா
தெனையீட்டு, நலங்கொள்கருணைச்சன்மார்க்கநாட்டில் வி
டுத்த நற்கொடியே, வலங்கொள்ஞான சித்தியெலாம் வய
ங்கவிளங்கு மணிமன்றிற், குலங்கொள்கொடியே மெய்
ஞ்ஞானக்கொடியேயடியேற்கருளுகவே. (௭)

வெறிக்குஞ்சமயக் குழியில்விழ விரைந்தேனென் றன்னே
விழாதவகை,மறிக்குமொருபே ரறிவளித்தவள்ளற் கொ
டியேமனக்கொடியைச், செறிக்கும்பெரியருளத்தோங்கு
ந் தெய்வக்கொடியே சிவஞானங்,குறிக்குங்கொடியே ய
னந்தக்கொடியேயடியேற்கருள்கவே. (அ

கடுத்தவிடர் வன்பயங்கவலை யெல்லாந்தவிர்த்தாக்க
ல்துள்ளே, அடுத்தகொடியே யருளமுத மளித்தென்
ன்னை யருட்காத்தால்,எடுத்தகொடியேசித்திபெலா மி
தாமகனே யென்றெனக்கே,கொடுத்தகொடியேயானந்த
கொடியேயடியேற்கருள்கவே. (க

ஏட்டைசித்தவிர்த்தென்பெண்ணமெலா மெய்தவொ
தந் தியான்வனோந்,பாட்டைடப்புனைந்து பரிசளித்தபா
ஞானப் பதிக்கொடியே,தேட்டைக்கனிப்பே ரருட்
ங்கோல் செலுத்துஞ்சுத்த சன்மார்க்கக்,கோட்டைக்கொ
டியே யானந்தக்கொடியேயடியேற் கருள்கவே. (ய

திருச்சிற்றம்பலம்



உ

திருச்சிற்றம்பலம்.

# எழுத்தறியும்பெருமான் மாலை.

## திருவொற்றியூர்

### கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

சிந்தைமயக்கிற்றியங்குகின்றநாயேனை
முந்தைவினைதொலைத்துன்மொய்கழற்காளாக்காதே
நிந்தையுறாசோஷாளிகழுமைக்குளிடுதோ
வெந்தைகநீயொற்றியெழுத்தறியும்பெருமானே. (௧)

மத்தனைவன்னெஞ்சனைவஞ்சனைவன்பிணிகொள்
பித்தனைநீஞட்போக்கும்பேயேனைநாயேனை
முத்தனையாயுன்றன்முளரித்தாட்காளாக்க
வெத்தனைநாட்செல்லுமெழுத்தறியும்பெருமானே. (௨)

நன்னெறிசேரன்பர்தமைநாடவுமின்புகுநின்
சொன்னெறியைச்சேர்ந்திடவுஞ்செய்தாயெனக்குனக்கு
முன்னறியேன்பின்னறியேன்மூடனேனென்னைநமாறிற்
றென்னறிவேனையாவெழுத்தறியும்பெருமானே. (௩)

மைப்படியுங்கண்ணார்மையலுழக்கச்செய்வாயோ
கைப்படியவுன்றன்கழல்கருதச்செய்வாயோ
இப்படியென்றப்படியென்றென்னறிவேனுன்சித்த
மெப்படியோவையாவெழுத்தறியும்பெருமானே. (௪)

நில்லாவுடம்பைநிலையென்றேநேசிக்கும்
பொல்லாதநெஞ்சப்புலையனேனிவ்வுலகிற்

சொல்லாமனோயாற்சோர்வுற்றலையுமல்ல
லெல்லாமறிவாயெழுத்தறியும்பெருமானே. (௫)

தீதறிவேனன்கணுவுஞ்செய்யேன்வீணாட்போக்கும்
வாதறிவேன்வஞ்சகனேன்வல்வினையேன் வாய்மையிலே
னூதறிவேன்மாலயனுஞ்சொல்லரியவின்பெருமை [ன்
யாதறிவேனையாவெழுத்தறியும்பெருமானே. (௬)

மாறாதவன்பிணியான்மாழாந்துநெஞ்சயர்ந்தே
கூறாதநோன்பங்கொடுங்கடற்குள் வீழ்ந்திடவே
யாறாதாற்றியழுகின்றேனின்செவியி
லேறாதோவையாவெழுத்தறியும்பெருமானே. (௭)

உன்னும்வல்வினையாலோயாப்பிணியுழந்து
புண்ணாகநெஞ்சம்புழுங்குகின்றேன் புண்ணியனே
கண்ணாளவன்றான்கருணையெனக்கிரக்க
வெண்ணேயோவையாவெழுத்தறியும்பெருமானே, (௮)

புன்செய்கைமாறாப்புலையமடமங்கையர்தம்
வன்செய்கையாலேமயங்குகின்றவஞ்சகனேன்
கொன்செய்கைமாறாதகூற்றவன்வருவானே
லென்செய்வேனையாவெழுத்தறியும்பெருமானே. (௯)

சங்குடையான்றாமரையான்றண்டமிழுங் காணரிதாங்
கொங்குடையகொன்றைக்குளிர்சடையாய் கோதையொ
டங்குடையாயேழைமுகம்பாராதுதள்ளிவிட்டா [ரு
லெங்கடைவேனையாவெழுத்தறியும்பெருமானே. (௧௦)

மன்றினிடைநடஞ்செய்மாணிக்கமாமலையே
வென்றிமழுக்கையுடையவித்தகனேயென்றென்று
கன்றினையர்ந்தழுமென்கண்ணீர்துடைத்தருளா
லென்றாவருவாயெழுத்தறியும்பெருமானே. (௧௧)

மன்னளவிற்சோதிமணிபோல்வாய்மாதவத்தோர்
தென்னளவும்வேணிச்சிவனேயெனவொருகாற்
சொன்னளவிற்சொன்னவர்தந்துன்பொழிப்பா யென்பா
லென்னளவிற்காணேனெழுத்தறியும்பெருமானே. [து
யின்போல்வாரிச்சையினால்வெம்புகின்றேனானாலுந்
தன்போல்வாயென்னின்றதாய்போல்வாய் சார்ந்துறையா
ப்,பொன்போல்வாய்நின்னருளிப்போதடியேன் பெற்றே
னே,லென்போல்வாரில்லையெழுத்தறியும் பெருமானே.(
பூமாந்தும்வண்டெனநின் பொன்னருளைப் புண்ணியர்க
டாமாந்தினின்னடிக்கீழ்ச்சார்ந்துநின்றுணையோநான்
காமாந்தகாரமெனு கன்றுண்டுகண்மூடி
யேமாந்தேனாற்றியெழுத்தறியும்பெருமானே. (௧௪)
பன்னருமிப்பார்கடையிற்பாடுறும் பாதகனேன்
றன்னியநின்பொன்னடியைச்சூழாதேனாயிடினும்
புன்னிகரேன்குற்றம்பொறுக்கப்பொறாப்பனக்கே
யென்னருமைத்தாய்நீயெழுத்தறியும்பெருமானே. ( )
வீட்டுக்கடங்காவிளையாட்டுப்பிள்ளையெனக்
கேட்டுக்கடங்காத்தீமனத்தாலாந்துயரம்
பாட்டுக்கடங்காநின்பத்தரடிப்புகழ்போ
லேட்டுக்கடங்காதெழுத்தறியும்பெருமானே. (௧௬)
பன்னுபணத்தாற்பரிபிழந்தபாதகனேன்
றன்னுமலவெங்கதிரோன்சூழ்கின்றசோடையினா
னின்னருணீர்வேட்டிலைகலங்கிவாடுகின்றே
னின்னுமறியாயோவெழுத்தறியும்பெருமானே. (௧௭)
கல்லைநிகராங்கடைமனம்போங்காணெறியிற்
புல்லைமதித்தையோவைம்பூவிழந்தபொய்யடியே

ஞெல்லைபடுகின்றவொறுவேதனைதனைக்கோ
றெல்லையறியேனெழுத்தறியும்பெருமானே. (௧௮)

பொன்னைமதித்தையாபின்பொன்னடியைப்போற்றுத
கன்னிகருநெஞ்சாற்கலங்குகின்றகைதவனே
னின்னலுழக்கின்றவேழைகட்குமேழைகண்டா
யென்னைவிடாதேயெழுத்தறியும்பெருமானே. (௧௯)

மாசுவரோவென்னுமலைக்கடல்வீழ்ந்தலைகோ
ராசுவரோவென்னவலைவேனையாளாயேல்
கூசுவரோகைகொட்டிக்கூடிச்சிரித்தடியா
ரேசுவரோவொற்றியெழுத்தறியும்பெருமானே. (௨௰)

ஊர்சொல்வேன்பேர்சொல்வே னுத்தமனே னுன்றிருத்
சீர்சொல்வேனென்றனைநீசேர்க்காதகற்றுவையே [யாட்
னோர்சொல்வாயுன்றனக்குநீதியிதல்லவென்றே
யார்சொல்வாரையாவெழுத்தறியும்பெருமானே. (௨௧)

நீக்கமிலாமெய்யடியார்நேசமிலாப்பொய்யடியே
னூக்கமிலாநெஞ்சத்தினொட்டகலச்செய்வாயே
றூக்கமிலாவானந்தத்தூக்கமென்றிமற்றுயிங்கோ
ரேக்கமிலேனொற்றியெழுத்தறியும்பெருமானே. (௨௨)

போகின்றவஞ்சகனைப்போக்கியுன்றன்பொன்னடிக்கா
ளாகின்றமேலோரடிவழுத்தாதாயெற்குப்
பாகின்றனிச்சுவையிற்பாங்காகுமென்னுளே
ஈகின்றதென்றோவெழுத்தறியும்பெருமானே. (௨௩)

ஊழையகற்றவுளவறியாப்பொய்யனிவன்
பீழைமனைமடமைப்பெருந்தமனக்கொடிய [செய்வே
தாழையென வெண்ணியென்னைத் தள்ளிவிடா தென்
னேழைநாடொற்றியெழுத்தறியும்பெருமானே. (௨௪

வினையுடையா னென்றிங்கெனையாள்வதுன் கடனே
யெனையுடையா யொற்றியெழுத்தறியும்பெருமானே. ()

திருச்சிற்றம்பலம்.

எழுத்தறிபெருமான்மாலை-முற்றிற்று.

௨

திருச்சிற்றம்பலம்.

## சிறுவிண்ணப்பம்,

பொது - எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பண்ணுவன் னருட்புகழ்ப்பாடுகின்றார் பணிகின்றார் நின்னாழைப்பார்த்துப்பார்த்துக், கண்ணுறா வுளங்குளிரக்களித்தானந்தக்கண்ணீர் கொண்டாடுகின்றார் கருணைவாழ்வை, எண்ணுகின்றனை யெந்தாயெந்தா யென்கின்றார் நின்னன்பரெல்லாமென்ற, னென்னுநா னொருபாவி நஞ்சநெஞ்சாலலைகின்றேனென்செய்கே னந்தோவந்தோ.

எப்பாலு நின்னன்பரெல்லாங்கூடி யேத்துகின்றார்நின் பதத்தையேழையேனுன், வெப்பாயமடவியர்தங் கலவி வேட்டுவிழுகின்றேன் கண்கெட்ட விலங்கேபோல, விப்பாரின் மயங்குகின்றேனென்னைப்போன்று மென்னுகிலேன் முக்கணுடையிறைவா வென்ற, னப்பாவென் னுயிர்க்கோர்துணைவா வீணி னலைகின்றே னென்செய்கே னந்தோவந்தோ. (௨)

இன்புடையார் நின்னன்பரெல்லா நின்சீர் நசைக்கின்றார் நானொருவனேழையிங்கே, வன்புடையார் தமைக்கூடி யவமேநச்சுமாமரம்போ னிற்கின்றேன் வஞ்சவாழ்க்கைத், துன்புடையாரனைவர்க்குந் தலைமைபூண்டேன் மைநாய்

யென்பதறிந்திலேன் சூழ்ந்தோர்க்கெல்லா, மன்புடையா
யெனையுடையாய் விடையாய்வினை யலைகின்றே னென்
செய்கேனந்தோவந்தோ. (௩)

விஞ்சுடையாய்நின்னன்பரெல்லாநின் சீர்மெய்புகழமெ
ழுத்திக்குவிளங்குகின்றார், நஞ்சுடையார் வஞ்சகர்தஞ்
சார்பினீங்கேனொருவன்பெரும்பாவிநண்ணிமூட, நெ
ஞ்சுடையார்தமக்கெல்லாந்தலைமைபூண்டிருக்கின்றேன்க
ருணைமுகிமலைக்கஞ்ச, மஞ்சுடையாயாறுடையசடையா
ய்வினையலைகின்றேனென்செய்கேனந்தோவந்தோ, (௪)

பொய்யாதநின்னடியாரெல்லாநல்ல புண்ணியமேசெய்
தாங்கினைப்போற்றுகின்றார், மையாநின் றலைகின்ற மனத்
தாலிங்கேனொருவன்பெரும்பாவிநாயேன்றீமைச், செ
ய்யாநின்றுழைக்கின்றேன்சிறிதுநின்னைச் சிந்தியேன்வந்
திக்குந்திறமுநாடே, னையாவென்னப்பாவென்னரசேவி
னைநலைகின்றேனென்செய்கேனந்தோவந்தோ, (௫)

தெருளுடையார்நின்னன்பரெல்லாநின்றாட் சிந்தையி
ல்வைத்தானந்தத்தேக்குகின்றார், மருளுடைய னொ
ருவன்பாவிவஞ்சமனத்தாலேயிளைத்திளைத்து மயங்குகி
ன்றே, னிருளுடையேனெர்பூட்டிப்படுபோலிங்கிலுழ
ப்பிலுழைக்கின்றேனெல்லாமவல்ல, வருளுடையாயாரு
டையாயுடையாய்வினையலைகின்றே னென்செய்கே னந்
தோவந்தோ. (௬)

வாரமுள்ளார்நின்னடியாரெல்லாநின்னைவாழ்த்துகின்று
ர்தலைகுனிரவணங்குகின்றார், நிரமிலே னொருவன்பா
விவஞ்சச்செயல்விளக்குமனத்தாலே யிளைத்தேன் சை
வ, சாரமிலேனுசார மில்லேன்சித்த சாந்தமிலேனிரக்க

மிலேன்றகவுமில்லை, ஞாரமுதேமுக்களுடை யாசேவி
ணினலைகின்றேனென் செய்கேனந்தோவந்தோ. (எ)

வண்மைபெறுமின்னன்பரெல்லாநின்னை வந்தனைசெய்
தானந்தவயத்தேநின்றார், பெண்மையுறு மனத்தாலே நி
னைத்தேநின்சீர்பேசுகிலேன் கூசுகிலேன் பேதைநானோ
ரொண்மையிலேனொழுக்கமிலேனண்மையன்ப ரொழுகாண்
றுமிலேனெறியேபோலுற்றேன்பிக்க, வண்மையிவ்வா
தருள்புரிவோ யென்னேவீணி லலைகின்றே னென்செய்
கேனந்தோவந்தோ. (௮)

உம்பர்தமக்கரிதாமுன்பதத்தை யன்றியொன்று மதி
யாருன்னையுற்றோரெல்லா, மிம்பர்வினையுடையேனு மொ
ருவன்பாவியெட்டுணையுநினைந்தறியேனென்றுமெங்கு
வம்பவிழ்பூங்குழன்மடவார்மையலொன்றே மனமுடை
யேனுழைத்திளைத்தமாடுபோல்வே, னம்பலத்தெம் மா
சேயிவ்வாழ்க்கைத்துன்பினலைகின்றேனென்செய்கேனந்
தோவந்தோ. (௯)

கொலையறியாக்குணத்தோர்நின்னன்பரெல்லாங் குண
மேசெய்துன்னருடான் கூடுகின்றார், புலையறிவே னொ
ருவன்பிழையேசெய்துபுலன்கெட்ட விலங்கேபோற்கல
ங்குகின்றே, னிலையறியேனெறியொன்றுமறியேனொன்று
நினையன்றித்துணையொன்றுமறியேன் சற்று, மலையறியா
வருட்கடனீயாள்கவினிலலைகின்றேனென்செய்கே னந்
தோவந்தோ. (௰)

திருச்சிற்றம்பலம்.

சிறுவிண்ணப்பம் - முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்

# இராமலிங்கபிள்ளை

அவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# காட்சிக்கண்ணி.

---

இஃது

சரவணபுரம்

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.

---

புரசைபாக்கம்.

எழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சுபானு ௵.





திருச்சிற்றம்பலம்.

இராமலிங்கப்பிள்ளை

# காட்சிக்கண்ணி.

வெண்பா.

சத்தமுறுமெய்ஞ்ஞானச் சோதியுருவாய்வந்த
வித்தகஞ்சேராமலிங்க வேளுரைத்த-வுத்தமஞ்சே
கர்த்தனருளாங்காட்சி கண்ணிகளைச்சிந்தித்தால்
அர்த்தமுடன் முத்தியுலகாம்,

சாமா-சாப்புதாளம்,

ஆணிப்பொன்னம்பலத்தே கண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி. அம்மா
அற்புதக்காட்சியடி, (க)

ஜோதிமலையொன்று தோன்றிற்றதிலொரு
வீதியுண்டாச்சுதடி. அம்மா
வீதியுண்டாச்சுதடி, (உ)

வீதியிற்சென்றே னவ்வீதினடுவொரு
மேடையிருந்ததடி. அம்ம
மேடையிருந்ததடி, (ங

மேடைமேலேறினேன் மேடைமேலங்கொரு
கூடமிருந்ததடி அம்மா
கூடமிருந்ததடி (௪)

கூடத்தில் நாடவக் கூடமேலேழ்நிலை
மாடமிருந்ததடி அம்மா
மாடமிருந்ததடி, (௫)

ஏழ்நிலைக்குள்ளு மிருந்தவதிசயம்
என்னென்றுசொல்வேனடி அம்மா
என்னென்றுசொல்வேனடி, (௬)

ஓர்நிலைதன்னி லொளிர்முத்துவெண்மணி
சீர்நிலமாச்சுதடி அம்மா
சீர்நிலமாச்சுதடி (௭)

பாறோர்நிலையிற் கருநீலஞ்செய்ய
பவளமாச்சுதடி அம்மா
பவளமாச்சுதடி, (௮)

மற்றோர்நிலையில் மரகதப்பச்சைசெம்
மாணிக்கமாச்சுதடி அம்மா
மாணிக்கமாச்சுதடி, (௯)

பின்றோர்நிலையிற்பெருமுத்துவச்சிர
பேர்மணியாச்சுதடி அம்மா
பேர்மணியாச்சுதடி, (௰)

வேறோர் நிலையில் மிகும்பவளத்திரள்
வெண்மணியாச்சுதடி — அம்மா
வெண்மணியாச்சுதடி, (கக)

பகலோர் நிலையிற் பொருந்தியபன்மணி
பொன்மணியாச்சுதடி — அம்மா
பொன்மணியாச்சுதடி, (கஉ)

பதியோர் நிலையிற் பகர்மணியெல்லாம்
படிகமதாச்சுதடி — அம்மா
படிகமதாச்சுதடி, (கங)

ஏழ்நிலைமேலேயிருந்ததோர் தம்பம்
இசைந்தபொற்றம்பமடி — அம்மா
இசைந்தபொற்றம்பமடி, (கச)

பொற்றம்பங்கண்டேறும் போதுநான்கண்ட
புதுமையென்சொல்வேனடி — அம்மா
புதுமையென்சொல்வேனடி, (கரு)

ஏறும்போதங்கே யெதிர்ந்தவகைசொல்ல
என்னளவல்லவடி — அம்மா
என்னளவல்லவடி, (கசா)

ஆங்காங்கேசத்திக ளாயிரமாயிரம்
ஆகவந்தார்களடி — அம்மா
ஆகவந்தார்களடி, (கஎ)

வந்துமடக்க மயங்காமனூனருள்
வல்லபம்பெற்றேனடி — அம்மா
வல்லபம்பெற்றேனடி, (கஅ)

வல்லபத்தாலந்த மாதம்பத்தேறி
மணிமுடிகண்டேனடி — அம்மா
மணிமுடிகண்டேனடி, (க௯)

மணிமுடிமேலோர் கொடுமுடிநின்றது
மற்றதுகண்டேனடி — அம்மா
மற்றதுகண்டேனடி, (உ௰)

கொடுமுடிமேலாயிரத் தெட்டுமாற்றுப்பொற்
கோயிலிருந்ததடி — அம்மா
கோயிலிருந்ததடி, (உக)

கோயிலைக்கண்டங்கே கோபுரவாயிலிற்
கூசாதுசென்றேனடி — அம்மா
கூசாதுசென்றேனடி, (உஉ)

கோபுரவாயிலுட்சத்திகள் சத்தர்கள்
கோடிபல்கோடியடி — அம்மா
கோடிபல்கோடியடி, (உங)

ஆங்கவர்வண்ணம்வெள்வண்ணஞ்செவ்வண்ண
ஐவண்ணமாகுமடி — அம்மா
ஐவண்ணமாகுமடி, (உ௪)

அங்கவெல்லாமிங் காரிலவொன்னையும்
அப்பாலேசென்றேனடி — அம்மா
அப்பாலேசென்றேனடி, (உ௫)

அப்பாலைசென்றேனங் கோர்திருவாயிலில்
ஐவரிருந்தாரடி — அம்மா
ஐவரிருந்தாரடி, (உ௬)

மற்றவர்தின்று வழிகாட்டமேலோர்
மணிவாயிலுற்றேனடி — அம்மா
மணிவாயிலுற்றேனடி, (உ௭)

எண்ணும்வாயிலிற்பெண்ணொடாணாக
இருவரிருந்தாரடி — அம்மா
இருவரிருந்தாரடி, (உ௮)

அங்கவர்காட்ட வனுக்கத்திருவாயில்
அன்போடுகண்டேனடி — அம்மா
அன்போடுகண்டேனடி, (உ௯)

அத்திருவாயிலி லானந்தவல்லியென்
அம்மையிருந்தாளடி அம்மா
அம்மையிருந்தாளடி, (௯௰)

அம்மையைக்கண்டே னவளருள்கொண்டேன்
அமுதமுமுண்டேனடி அம்மா
அமுதமுமுண்டேனடி, (௯௧)

தாங்குமவளரு ளாலேநடராஜர்
சந்நிதிகண்டேனடி அம்மா
சந்நிதிகண்டேனடி, (௯௨)

சந்நிதியிற்சென்று நான்பெற்றபோது
சாமியறிவாரடி அம்மா
சாமியறிவாரடி, (௯௩)

ஆணிப்பொன்னம்பலத்தே கண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி அம்மா
அற்புதக்காட்சியடி, (௯௪)

திருச்சிற்றம்பலம்

முற்றிற்று,



திருச்சிற்றம்பலம்,

---

வானத்தின்மீது மயிலாடக்கண்டேன்
மயில்குயிலாச்சுதடி அக்கச்சி
மயில்குயிலாச்சுதடி, (க)

துள்ளலைவிட்டுத் தொடங்கினேன்மன்றுடும்
வள்ளலைக்கண்டேனடி அக்கச்சி
வள்ளலைக்கண்டேனடி, (உ)

சாதிச்சமயச் சழக்கைவிட்டேனருட்
சோதியைக்கண்டேனடி அக்கச்சி
சோதியைக்கண்டேனடி, (௩)

பொய்யையொழித்துப் புறப்பட்டேன்மன்றுடும்
ஐயரைக்கண்டேனடி அக்கச்சி
ஐயரைக்கண்டேனடி, (௪)

முற்றுப்பெற்றது,

உ

சிவமயம்.

# திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்.

# இராமலிங்கப்பிள்ளை

# அவர்கள்.

# திருவாய்மலர்ந்தருளியதிருத்தணிகை,

# சுப்பிரமணியர்பதிகங்கள்.

---

இஃது.

சரவணபுரம்.

சண்முகமுதலியாரவர்களால்.

பரிசோதித்து,

வே-சுந்தரம்பிள்ளைகேட்டுக்கொண்டபடி

புரசபாக்கம்

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சுபானுவ௵





## திருச்சிற்றம்பலம்.

## திருத்தணிகை.

## சுப்பிரமணியர்பேரில்பதிகங்கள்.



சீர்பூத்தவருட்கடலே கரும்பேதேனே செம்ப
கேயெனதுகுலதெய்வமேநற், கூர்பூத்தவெண்மை
க்கையரசேசார்ந்தகுணக்குன்றே தணிகைமலைக்கே
வேஞானப், பேர்பூத்தநின்புகழைக்கருதியேழை
ழைக்கவருள்செய்வாயோ பிழையைநோக்கிப், பா
பூத்தபவத்திலுறவிடுவனென்செய்கேன் பாவியெ
த்தோவன்பயந்திலேனே. (௧

தீராதுயர்க்கடலிலழுந்திநாளுந் தியங்கியழு
ங்குமிந்தச் சேய்க்குநீகண், பாராதசெயலெனே
யெத்தாயெந்தாய்பாவியெனவிட்டனையோ பன்
ளாக, வேராயவருள் தருவாயென்றேயமாந் திரு
தேனே யென்செய்கேன் யாருமில்லேன் சீராருந்
ணிகைவளா யழுதேயாகித்தெய்வமேநின்கருத்தை
த்தெளிந்திலேனே. (௨

தெளிக்குமறைப்பொருளேயென்னன்பேயெ
றன்செல்வமே திருத்தணிகைத்தேவேயென்பா, களி
குமறைக்கருத்தேமெய்ஞ்ஞான நீதிக்கடவுளே நி

னருளைக்காணேனின்னும், சுளிக்குமிழுத்துயருமுய
மன் கயிறு"மீனத்தொடர்பு மலத்தடர்பு மனச்சேர்
வமத்தோவளிக்கு மெனையென்செயுமோவறியே னி
ன்றனடித்துணையேயுறு துணைமற்றன்றியுண்டோ.()
உண்டாயவுலகுயிர்கடம்மைக்காக்கவொளித்திரு
ந்தவ்வுயிர்வினைகளொருங்கேநாளும், கண்டாயேயி
வ்வேழைகலக்கு தன்மைகாணுயோபன் னிரண்டுக
ண்கள்கொண்டோய் தண்டாத நின்னருட்குத்தகு
மோவிட்டாற்றருமமோதணிகைவரைத்தலத்தின்வா
ழ்வேவிண்டாதிதேவர்தொழு முதலே முத்திவித்தே
சொற்பதங்கடந்தவேற்கையானே, (௬)
வெய்யாதவன்புடையாரங்கைமேவுங்கனியேயென்
னுயிரேயென்கண்ணேயென்றும், பொய்யாதபூரண
மேதணிகைஞானப்பொருளே நின்பொன்னருளை
ப்பேறியான்பெற்றால் உய்யாதகுறையுண்டோ து
யர்சொல்லாமலோடுமேயமன்பாச மொய்த்துபோ
மென்,ஐயா நின்னடியரொடும்வாழ்வெனிங்கானே
யல்லாமலெனக்கின்றருள் செய்வாயே. (௭)
வாய்குழனதருளன்றேயத்தோநாளும் வழிபார்
த்திங்கிளக்கின்றேன்வருந்தும்பொல்லா:நோய்க்கு
முழு துயர்க்குமிலக்கானேன்மாழ்கி நாந்தே நின்ன
ருள்காணேனுவலும்பாசத்,தேய்க்குமயன்வரிவலை

க்கியாதுசொல்வேனென்செய்கேன்றுணையறியாமே
ழையேனே, தூய்க்குமார குருவே தென்றணிகைமே
வுஞ்சோதியேயிரங்காயோதொழும்பாளர்க்கே. (க

ஆளாயோ துயராளக்கர்வீழ்ந்து மாழ்கினையயாவே
வென்னுமுறையையந்தோசற்றுங், கேளாயோவெ
ன்செய்கேனெந்தாயன்பர்கிளைத்துமுனகருளென
குக்கிடையாதாகில், நாளாயோ நடுவன்வரிலென்செ
ய்வானே நாயினேனென்சொல்வேனுனுவேரு
தோளாவோர்மணியே தென்றணிகை மேவுஞ்சுடரே
யென்னறிவேசிற்சுகங்கொள்வாழ்வே (௪

வாழ்வேநற்பொருளே நன்மருந்தே ஞான வாரி
யேதணிகைமலைவள்ளலேயான், பாழ்வேலையெனு
கொடியதுயருண்மாழ்கிப்பதைத்தையாமுறையே
நின் பதத்துக்கென்றே, காழ்வேனீதறிந்திலையோ ந
யேன் மட்டுந்தயவிலையோ நான்பாவிதானோ யார்
குள் ஆழ்வேனென் றயல்விட்டானிதுவேயோ வ
சேரவிங்கென்செய்கேனன்னோலன்னோ. (௫

அன்னோவே நின்னடியையன்றிவேறோராதரவி
கறியே னெஞ்சழிந்துதுன்பாற், புன்னோக வன்ற
னையின்னும்வஞ்சர்பாற்போய்ப்புலர்ந்துமுகவா
டமுடன்புலப்பிதற்கப், பண்ணோதேயாவவன்ட
விக்குள்ளும்படுபாவி யென்றனைப் பரிந்துக

ளா, என்றுதேயான் மிகவுமேமைழகண்டாயிசைக்கரி
யதணிகையில்வீற்றிருக்குங்கோவே (௯)

கோவேநற்றணிகை வரையமர்ந்தஞானக் குலம
ணியே குகனேசற்குருவேயார்க்குந், தேவேயென்
விண்ணப்பமொன்று கேண்மோசிந்தைதனிலினைக்
கவருள்செய்வாய்நாளும், பூவேயுமயன்றிருமால்புல
வர்முற்றும்போற்றுமெழிற்புரந்தானெனப்புவியுமோ
ங்கச், சேவேறும்பெருமானிங்கிவர்கள் வாழ்த்தல்செ
ய்குவக்குநின்னிரண்டுதிருத்தாட்சிரோ. (௰)

முற்றிற்று.



உ

திருத்தணிகை,

## சுப்பிரமணியர்பேரில்பதிகம்.

ஆறுமுகப்பெருங்கருணைக்கடலேதெய்வயானைம
கிழ்மணிக்குன்றேயரசேமுக்கட் பெருமுகப்பெரு
ஞ்சுடர்க்குஞ்சுடரோசெவ்வேள்பிடித்தருளும்பெரு
ந்தகையே பிரமஞானம் வீறுமுகப் பெருங்குணத்
தோரிதையத்தோங்கும்விளக்க மெயானந்தவெள்ள
மெமுன்றேறுமுகப்பெரியவருட்குருவாய்யென்னை
ச்சிறுகாலையாட்கொண்டதேவதேவே. (௧)

கண்ணிமதிபுனைந்தசடைக் கனியேமுக்கட்கரும்
பேயென்கண்ணேமெய்க்கருணைவாழ்வே, புண்ணி
யநன்னிலையுடையோ ருளத்தில்வாய்க்கும் புத்தமு
தேயாநந்தபோகமேயென், றெண்ணியமெய்த்தவர்
க்கெல்லா மெளிதிலீந்தவென்னரசேயாறு முகத்தி
றையாய்வந்தோ, யின்னியவென்மனமுருக்கிக் குரு
வாயென்னைச்சிறுகாலையாட்கொண்டதேவதேவே.

நின்னிருதாட்டுணைப்பிடித்து வாழ்கின்றேனு னி
ன்னையலாற்பின்னையொருதேயங்காணேன், என்னை
யிகழ்த் திருவுளத்தினினைதியோ நானேழையினுமே
ழைகண்ட யெந்தாயெந்தாய் பொன்னையன்றிவிரு
ம்பாத புல்லர்தம்பாற் போகவொழித் துன்பதமே
போற்றும்வண்ணம், சின்னமளித்தருட்குருவாயெ
ன்னைமுன்னேசிறுகாலையாட்கொண்டதேவதேவே.

கல்வியெலாங் கற்பித்தாய் நின்பாலேயங் காண
வைத்தாயிவ்வுலகங்காணவென்றே, ஒல் லும்வகையறி
வித்தாயுள்ளே நின்றென்னுடையானே நின்னருளா
முதவுகின்றாய், இல்லையெனப்பிறர்பாற்சென்றிரவா
வண்ணமேதவளித்தாயிரக்க மென்னேயென்னே
செல்வவருட்குருவாகிநாயினேனைச் சிறுகாலையாட்
கொண்டதேவதேவே. (௩

எந்தைபிரானென்னிறைவனிருக்கவிங்கே யென்
னகுறைநமக்கென்றே யிறுமாப்புற்றே, மந்தவுலகி
னிற்பிறரையொருகாசுக்குமதியாமனின்னடியேமதி
க்கின்றேனுன், இந்தவடியேனிடத்துன்றிருவுளந்தா
னெவ்வாறோவறிகிலேனேழையேனே, சிந்தைமகி
ழ்ந்தருட்குருவா யுள்ளேநின்று சிறுகாலையாட்கொ
ண்டதேவதேவே, (௫)

மாறாதபெருஞ் செல்வயோகர்போற்று மாமணி
யேயாறுமுக மணியேநின்சீர், கூறாதபுலைவாயையு
டையார்தம்மைக்கூடாதவண்ணமருட்குருவாய்வந்
து, தேறாதநிலையெல்லாந்தேற்றியோங்குஞ் சிவஞா
னச்சிறப்படைந்து இடைப்புநீங்கி, ஈறாதவாழ்வி
டைநான்வாழவென்னைச் சிறுகாலை யாட்கொண்ட
தேவதேவே, (௬)

கற்றறிந்த மெய்யுணர்ச்சி யுடையோருள்ளக்கம
லத்தேயோங்குபெருக்கடவுளேநின், பொற்றகைமா
மலரடிச்சீர்வழுத்துகின்றபுண்ணியர் தங்குழுவிலெ
னைப்புகுத்தியென்றுட், உற்றவருட்சிந்தனைதந் தின்
பமேவியுடையாயுன்னடியவ னென் றோங்குவண்
ணஞ்சிற்றறிவை யகற்றியருட்குருவாயென்னைச்சிறு
காலையாட்கொண்டதேவதேவே, (௭)

ஞாலமெலாம்படைத்தவனைப் படைத்த முக்
ணாயகனேவடிவேற்கைநாதனேநான், கோலமெ
ங்கொடியேனற்குணமொன்றில்லேன்குற்றமே
றைந்தேனிக்கோதுமேளனைச், சாலமெலாஞ்செய
டவார்மயக்கிநீக்கிச்சன்மார்க்கமடையவருட்டரு
யஞானச்,சீலமெலாமுடையவருட்குருவாயென்னை
ச் சிறுகாலையாட்கொண்டதேவதேவே. (அ

கற்பனையேயெனுமுலகச்சழக்கிலந்தோகாலூ
றிமயங்குகின்றகடையனேனைச், சொற்பனமிவ்வு
லியற்கையென்றுநிரஞ்சநந் துணிவுகொளச் செய
த்துன்வனைப்போற்றுனை, அற்பகலுநினைந்துகனி,
துருகிஞானவானந்தபோகமுறவருள்வேண்டுஞ்
சிற்பரசற்குருவாயவந்தென்னை முன்னே சிறுகாலை
யாட்கொண்டதேவதேவே, (கூ

பன்னிருகண்மலர்மலர்ந்தகடலேஞானப்பாரஞ்
டோயாறு முகம்படைத்தகோவே, என்னிருகண்
ணியேயென்றாயேயென்னை யீன்றாயே யென்ன
சேயென்றன்வாழ்வே,மின்னிருவர்புடைவிளங்க
யின்மீதேறிவிரும்பு மடியவர்காண மேவுந்தேவே
சென்னியினின்னடிமலர்வைத்தென்னைமுன்னே சி
றுகாலையாட்கொண்டதேவதேவே. (ய

திருச்சிற்றம்பலம்-முற்றிற்று.

உ

சிவமயம்,

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்

இராமலிங்கப்பிள்ளையவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# மகாதேவமாலை.

---

இஃது

சிதம்பரம்

அய்யாதுரைபிள்ளைகேட்டுக்கொண்டபடி

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சுபானு௵.



உ

திருச்சிற்றம்பலம்.

---

## ௧௩. தேவமாலை.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கருணைநிறைந்தகம்புறமுந்துளும்பிவழிந் துயிர்க்கெல்லாங்களைகணாகித், தெருணிறைந்தவின்பநிலை வளர்க்கின்றகண்ணுடையோய்சிதையாய்ஞானப், பொருணிறைந்தமறையமுதம்பொழிகின்ற மலர்வாயோய்பொய்யனேன்றன், மருணிறைந்தமனக்கருங்கற்பாறையுமுட்கசிந்துருக்கும்வடிவத்தோயே,

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகநிலைமுழுதாகி யாங்காங்குள்ளவுயிராகி யுயிர்க்குயிராமொளிதானாகிக், கலகநிலையறியாதகாட்சியாகிக்கதி

யாகிமெய்ஞ்ஞானக்கண்ணதாகி, யிலகுசிதாகாசமதாய்ப் பரமாகாச வியல்பாகியிணையொன்றுமில்லாதாகி,யலகிலறிவானந்தமாகிச்சச்சிதானந்தமயமாகியமர்ந்ததேவே. (க)

உலகமெலாந்தானிறைந்தவுண்மையாகி யோகியர்தமநுபவத்தினுவப்பாயென்றுங்கலகமுறாவுபசாந்தநிலையதாகிக் களங்கமற்றவருண்ஞானக்காட்சியாகி, விலகலுறாநிட்டானந்தமாகிமீதானத்தொளிர்கின்றவிளக்கமாகி,யிலகுபராபரமாய்ச்சிற்பரமாயன்பரிதயமலர்மீதிருந்தவின்பத்தேவே. (உ)

வித்தாகிமுளையாகிவிளைவதாகி விளைவிக்கும்பொருளாகிமேலுமாகிக், கொத்தாகிப்பயனாகிக்கொள்வோனாகிக்குறைவாகிநிறைவாகிக்குறைவிலாத, சத்தாகிச்சித்தாகியின்பமாகிச் சதாநிலையாயெவ்வுயிர்க்குஞ்சாட்சியாகி, முத்தாகிமாணிக்கமாகித்தெய்வ முழுவயிரத்தனிமணியாய் முளைத்ததேவே (௩)

வேதாந்தநிலையாகிச்சித்தாந்தத்தின் மெய்யாகிச்சமரசத்தின்விவேகமாகி, நாதாந்தவெளியாகிமுத்தாந்தத்தினடுவாகிநவாநிலைக்குநண்ணுதாகி, மூதாண்டகோடியெல்லாந்தாங்கிநின்ற முதலாகிமனுதீதமூர்த்தியாகி, வாதாண்டசமயநெறிக்கமையாதென்று மௌனவியோமத்தினிடைவயங்குந்தேவே. (௪)

தோன்றுதுவிதாத்துவிதமாய் விசிட்டாத்துவிதமாய்க்கேவலாத்துவிதமாகிச், சான்றசுத்தாத்துவிதமாய்ச்சுத்தந்தோய்ந்தசமரசாத்துவிதமுமாய்த்தன்னையன்றி, யூன்றுநிலைவேறொன்றுமிலதாயென்றுமுள்ளதாய்நிறிசயவுணர்வாயெல்லாமீன்றருளுந்தாயாகித்தந்தையாகி எழிற்குருவாய்த்தெய்வதமாயிலங்குந்தேவே. (௫)

பரமாகிச்சூக்குமமாய்த்தூலமாகிப் பரமார்த்தநிலையாகிப்பதத்தின்மேலாஞ், சிரமாகித்திருவருளாம் வெளியாயான்மசிற்சத்தியாய்ப்பரையின்செம்மையாகித்திரமாகித்தற்போதநிவர்த்தியாகிச் சிவமாகிச்சிவாநுபவச்செல்வமாகி, யரமாகியானந்தபோதமாகியானந்தாதீதமதாயமர்ந்ததேவே. (௬)

இந்தியமாய்க்கரணநியனைத்துமாகியியல்புருடனாய்க்காலபரமுமாகிப், பந்தமற்றவியோமமாய்ப்பரமாயப்பாற்பரம்பரமாய்விசுவமுண்டபான்மையாகி, வந்தவுபசாந்தமதாய்மௌனமாகி மகாமௌனநிலையாகிவயங்காநின்றவந்தமிறும்பதமாய்த்தற்பதமாயொன்றுமசிபதமாயதீதமாயமர்ந்ததேவே. (௭)

நின்மயமாயென்மயமாயொன்றுங்கட்டா நிராமயமாய்நிருவிகற்பநிலையாய்மேலாந், தன்மயமாய்த்தற்பரமாய்விமலமாகித்சுட்டத்தமாய்ச்சொரூபமாய்ச்சகசமாகிச், சி

ன்மயுமாய்ச்சிற்பரமாயசலமாகிச் சிற்சொலிதமாயகண்ட
சிவமாயெங்கு,மன்மயமாய்வாசகாதீதமாகிமனோதீதமாயம
ர்ந்தமௌனத்தேவே. (அ)

அளவிறந்தநெடுங்காலஞ்சித்தர்யோக ரறிஞர்மலரய
ன்முதலோரனந்தவேதங், களவிறந்துங்கரணாதி யிறந்து
ஞ்செய்யுங் கடுந்தவத்துங்காண்பரிதாகடவுளாகி,யுளவிற
ந்தவெம்போல்வாருள்ளத்துள்ளே யூறுகின்றதெள்ளமு
தவூறலாகிப், பிளவிறந்துபிண்டாண்டமுழுதுந்தானாய்ப்
பிறங்குகின்றபெருங்கருணைப்பெரியதேவே, (௯)

வாயாகிவாயிறந்தமௌனமாகி மதமாகிமதங்கடந்த
வாய்மையாகிக், காயாகிப்பழமாகித்தருவாய்மற்றைக்கரு
விகரணாதிகளின்கலப்பாய்பெற்ற, தாயாகித்தந்தையாய்ப்
பிள்ளையாகித் தானாகிநானாகிச்சகலமாகி, யோயாதசத்தி
யெலாமுடையதாகி யொன்றாகிப்பலவாகி யோங்குந்தே
வே, (௰)

அண்டங்கள்பலவாகி யவற்றின்மேலுமளவாகி யள
வாதவதீதமாகிப், பிண்டங்களனந்தவகையாகிப்பிண்டம்
பிறங்குகின்றபொருளாகிப்பேதந்தோற்றும், பண்டங்கள்
பலவாகியிவற்றைக்காக்கும்பதியாகியானந்தம் பழுத்துச்
சாத்துங், கொண்டெங்குநிழல்பரப்பித் தழைத்தஞானக்
கொழுங்கடவுட்டருவாகிக்குலவுந்தேவே, (௰௧)

பொன்னாகிமணியாகிப்போகமாகிப்புறமாகியகமாகி
ப்புனிதமாகி, மன்னாகிமலையாகிக்கடலுமாகிமதியாகிரவி
யாகிமற்றுமாகி, முன்னாகிப்பின்னாகிநடுவுமாகிமுழுதாகி
நாதமுறமுழங்கியெங்கு, மின்னாகிப்பரவியின்பவெள்ளந்
தேக்க வியன்கருணைப்பொழிமுகிலாய்விளங்குந்தேவே.

அரிதாகியரியதினுமரியதாகியநாதியாயருளதாகிப்
பெரிதாகிப்பெரியதினும்பெரியதாகிப் பேதமாயபேதமா
ய்ப்பிறங்காநின்ற கரிதாகிவெளிதாகிக்கலைகளாகிக்கலைகட
ந்தபொருளாகிக்காணாதீதத், தெரிதாவெளிநடுவி லரு
ளாம்வண்மைச்செழுங்கிரணச் சுடராகித்திகழுந்தேவே

உருவாகியுருவினிலுள்ளருவமாகி யுருவத்திலுரு
வாகியுருவுள்ளொன்று, யருவாகியருவினிலுள்ளருவமாகி
யருவத்திலருவாகியருவுள்ளொன்றாய்க், குருவாகிச்சத்து
வசிற்குணத்ததாகிக் குணாதீதப்பொருளாகிக்குலவாநின்
ற மருவாகிமலராகிவல்லியாகிமகத்துவமாயணுத்துவமா
ய்வயங்குந்தேவே, (கச)

சகலமாய்க்கேவலமாய்ச்சுத்தமாகிச்சராசரமாயல்ல
வாய்த்தானே தானு, யகலமாய்க்குறுக்கமாய் நெடுமையா
கியவையனைத்துமணுகாதவசலமாகி, யிகலுறுத்துணையா
கித்தனியதாகியெண்குணமாயெண்குணத்தெம்பிறையா
யென்று, முகல்லாத்தண்ணருள்கொண் டுயிரையெல்லா
மூட்டிவளர்த்திடுங்கருணையோவாத்தேவே. (கரு)

வாசகமாய்வாச்சியமாய்நடுவாயந்த வாசகவாச்சியங் கடந்தமௌனமாகித், தேசகமாயிருள்கமாயிரண்டுங்காட் டச்சித்தகமாய்வித்தகமாய்ச்சிறிதும்பந்த, பாசமுருப்பதி யாகிப்பசுவுமாகிப்பாசநிலையாகியொன்றும்பகராதாகி, நா சமிலாவெளியாகியொளிதானுகிநாதாந்தமுடிவினடனவி ற்றுந்தேவே. (கசு)

சகமாகிச்சீவனுயீசனுகிச் சதுமுகனுய்த்திருமாலா யரன்றானுகி, மகமாயைமுதலாய்க்கூடத்தனுகி வான்பிர மமாகியல்லாவழக்குமாகி, யிகமாகிப்பரமாகிச் சமயகோ டியெத்தனையுமாகியவைவெட்டாவான்கற், பகமாகிப்பர மாகிப்பரமமாகிப்பராபரமாய்ப்பரம்பரமாய்ப்பதியுந்தே வே. (கஎ)

விதியாகியரியாகிக்கிரீசனுகி விளங்குமகேச்சுரனுகி விமலமான, நிதியாகுஞ்சதாசிவனுய்விந்துவாகிநிசழ்நாத மாய்ப்பரையாய்நிமலானந்தப், பதியாகும்பரசிவமாய்ப்ப ரமாய்மேலாய்ப்பக்கமிரண்டாயிரண்டும்பகராதாகிக், கதி யாகியளவிறந்தகதிகளெல்லாங் கடந்துநின்றுநிறைந்தபெ ருங்கருணைத்தேவே, (கஅ)

மானுகிமோகினியாய்விந்துவாகிமற்றவையாற்கானு தவானமாகி, நானுகிநானல்லனுகிநானே நானுகும்பதமா கிநான்றான் கண்ட, தானுகித்தானல்லனுகித்தானேதானு

கும்பதமாகிச்சகசஞான, வானுகிவானடுவில் வயங்குகின்றமௌனநிலையாகியெங்கும்வளருந்தேவே. (கக)

மந்திரமாய்ப்பதமாகிவன்னமாகி வளர்கலையாய்த்தத்துவமாய்ப்புவனமாகிச், சந்திரனுயிந்திரனு யிரவியாகித்தானவராய்வானவராய்த்தயங்காநின்ற, தந்திரமாயிவையொன்றுமல்லவாகித்தானுகித்தனதாகித்தானுன்காட்டாவந்தரமாயப்பாலாயதற்கப்பாலாயப்பாலுக்கப்பாலாயமர்ந்ததேவே. (உ0)

மலைமேலுங்கடன்மேலுமலரின்மேலும் வாழ்கின்றமூவுருவின்வயங்குங்கோவே, நிலைமேலுநெறிமேலுநிறுத்துகின்றநெடுந்தவத்தோர்நிறைமேலுநிகழ்த்தும்வேதக், கலைமேலுமெம்போல்வாருளத்தின்மேலுங் கண்மேலுந்தோண்மேலுங்கருத்தின்மேலுந், தலைமேலுமுயிர்மேலுமுணர்வின்மேலுந் தருமன்பின்மேலும்வளர்தாண்மெய்த்தேவே. (உக)

பொற்குன்றேயகம்புறமும்பொலிந்துநின்ற பூரணமேயாரணத்துட்பொருளேயென்றுங், கற்கின்றோ கினியசுவைக்கரும்பேதான கற்பகமேகற்பகத்தீங் கனியேவாய்மைச், சொற்குன்றுநாவகத்துண்மாறுவின்பந்தோற்றுகின்றதிருவருட்சீர்ச்சோதியேவிண், ணிற்கின்றசுடரேயச்சுடருள்ளோங்கு நீளொளியேயவ்வொளிக்குணிறைந்ததேவே, (உஉ

தேசுவிரித்திருளகற்றியென் றுமோங்கித் திகழ்கின்றசெழுங்கதிரோசெறிந்தவாழ்க்கை, மாசுவிரித்திடுமனத்திற்பயிலாத்தெய்வ மணிவிளக்கேயானந்தவாழ்வேயெங்கும், காசுவிரித்திடுமொளிபோற்கலந்துநின்ற காரணமேசாந்தமெனக்கருதாநின்ற, தூசுவிரித்துடுக்கின்றோர் தம்மைநீங்காச் சுகமயமேயருட்கருணை துலங்குந்தேவே ()

கோவேயெண்குணக்குன்றேகுன்றுஞானக் கொழுந்தேனேசெழும்பாகேகுளிர்ந்தமோனக், காவேமெய்யறிவின்பமயமேயென்றன் கண்ணேமுக்கண்கொண்டகரும்பேவானத், தேவேயத்தேவுக்குந்தெளியவொண்ணுத் தெய்வமேவாடாமற்றிகழ்சிற்போதப். பூவேயப்பூவிறுறுமணமேயெங்கும் பூரணமாய்நிறைந்தருளும் புனிதத்தேவே. (உச)

வானேயவ்வானுலவுங்காற்றேகாற்றின் வருநெருப்பேநெருப்புநீர்வருவேநீரிற், றானேயம்புவியேயப்புவியிற்றங்குந் தாபரமேசங்கமமேசாற்றுகின்ற, வூனேநல்லுயிரேயுள்ளொளியேயுள்ளத் துணர்வேயவ்வுணர்வுகலந்தூறுகின்ற, தேனேமுக்கனியேசெங்கரும்பேபாகின் றீஞ்சுவையேசுவையனைத்துந்திரண்டதேவே. (உரு)

விண்ணேவிண்ணுருவே விண்முதலேவிண்ணுள் வெளியேயவ்வெளிவிளங்குவெளியே யென்றன், கண்ணேகண்மணியே கண்ணொளியேகண்ணுட் கலந்துநின்றகதி

ரேயக்கதிரின் வித்தே, தண்ணேதண் மதியேயம்மதிய்த்தண்ணமுதே தண்ணமுதசாரமேசொற் பண்ணிசையேபண்மயமேபண்ணின் பயனே மெய்த்வாழ்த்திப்பரவுந்தேவே. (௬)

மானையத்தவருளத்தேமலர்ந்த செந்தாமரைய்வயங்குகின்றமணியேஞானப், பூணேமெய்ப்பொருபற்புதமேமோனப்புத்தமுதேயானந்தம்பொலிந்தபே, யானைபெண்ணுருவமேயலையேயொன்றுமல்பேரொளியேயனைத்துந்தாங்கும், ஆனேசிற்சுகமேசுகமேற்பொங்குஞ் சொரூபானந்தக்கடலே சோதித்வே. (௭)

பூதமேயவைதோன்றிப்புகுந்தொடுக்கும்புகலிடம்புரிந்தபொருளேபோற்றும், வேதமேவேதத்விளைவேவேத வியன்முடியேயம்முடிவின் விளங்குவே, நாதமேநாதாந்தநடமேயந்த நடத்தினையுண்துகின்றநலமேஞான,போதமேபோதமெலாங்கடந்துற பூரணமேயாகியருட்பொலிந்ததேவே. (௨)

ஞாலமேஞாலமெலாம்விளங்கவைத்த நாயகமேபமுதனவிலாநின்ற, காலமேகாலமெலாங்கடந்தஞானதியேமெய்க்கதியளிக்குங்கடவுளேசிற்;கோலமேகுண

யுட்குறியேகோலங் குணங்குறிகள்கடந்துநின்றகுருவேய
ன்பர், சிலமேமாலறியாமனத்திற்கண்டசெம்பொருளேயு
ம்பர்பதஞ்செழிக்குந்தேவே. (௨௯)

தத்துவமேதத்துவாதீதமேசிற் சயம்புவேயெங்குறி
றைசாட்சியேமெய்ச், சத்துவமேசத்துவத்தின்பயனேமின்
பந் தந்தருளும்பெருவாழ்வாஞ்சாமியேயென்று, சித்தநிலை
தெளிவிக்குமொளியேசற்றுந் தெவிட்டாததெள்ளமுதே
தேனேயென்றுஞ், சுத்தநெறிதிறம்பாதாரறிவிற்றோய்ந்து
சுகப்பொருளேமெய்ஞ்ஞானந்துலங்குந்தேவே. (௩௰)

யோகமேயோகத்தின்பயனேயோகத்தொருமுதலே
யோகத்திலோங்குந்தூய போகமேபோகத்தின்பொலிவே
போகம்புரிந்தருளும்புண்ணியமேபுனிதஞானா, யாகமே
யாகத்தின்விளைவேயாகந் திறையேயவ்விறைபுரியு மின்
பேயன்பர், மோகமேமோகமெலாமழித்துவீற மோன
மேமோனத்தின்முளைத்ததேவே. (௩௧)

காட்சியேகாண்பதுவேஞேயமேயுட் கண்ணுடையா
ர் கண்ணிவைந்தகளிப்பேயோங்கு, மாட்சியேயுண்மைய
றிவின்பமென்னவயங்குநின்றவாழ்வேமாமௌனக்காணி
யாட்சியேயாட்சிசெயுமாசேகக்கறிவேமெய்யன்பதெள்
ளமுதேகல்ல, * சூட்சியேசூட்சியெலாங்கடந்துநின்றதுரி
யமேதுரியமுடிச்சோதித்தேவே. (௩௨)

* எதுகை நயம் பற்றி நின்றது.

மறைமுடிக்குப்பொருத்தமுறுமணியேஞா
இயேயன்பர்நடம்மனத்தேநின்ற, குறைமுடிக்குங்
குன்றேகுன்றாமோனக்கோமளமேதூயசிவக்கொ
வெள்ளைப், பிறைமுடிக்கும்பெருமானே துளவ
பெம்மானேசெங்கமலப்பிரானேயிந்த, விறைமு
வர்கட்குமேலாய்நின்ற விறையேயிவ்வுருவுமின்றி
தேவே.

கோதகன்றயோகர்மனக்குகையில்வாழுங் கு
ண்முகங்கொண்டகோவேவஞ்ச, வாதகன்றஞானிய
இலிஓராறும்வானமுதேயானந்தமழையேமாயை,
ன்றமுத்தர்களைவிழுங்குஞான வேழமேமெய்யின்
ந்தேநெஞ்சிற், றீதகன்றமெய்யடியார்தமக்குவாய்த்
வமேயெல்லையிலாச்சீர்மைத்தேவே.

அருளுருவிவழிந்துவழிந்தொழுகவோங்கு ம
த்தனிமலையேயமலவேதப், பொருளளவுமிறந்தவை
மேலுமோங்கிப் பொலிஇன்றபரம்பொருளேபுரல
யிருளறுசிற்பிரகாசமயமாஞ்சுத்த வேதாந்தப்பெ
ளிக்குளிருந்தவாழ்வே, தெருளளவுமுளமுழுதுங்
கொண்டு இத்திக்குஞ்செழுந்தேனேதேவதேவே.

அளவையெல்லாங்கடந்துமனங்கடந்துமற்றைய
யெல்லாங்கடந்துகடந்தமலயோக, குளவையெல்லாங்

பதங்கடந்துமேலையொன்று கடந்திரண்டுகடந்துணரச்சூழ்ந்த, களவையெலாங்கடந்தண்டபிண்டமெல்லாங் கடந்துநிறைவானசுகக்கடலேயென்பர், வளவையெலாமிருளகற்றுமொளியேமோனவாழ்வேயென்னுயிர்க்குயிராய்வதியுந்தேவே.

(௩௬)

வன்புகலந்தறியாதமனத்தோர் தங்கண்மனங்கலந்துமதிகலந்துவயங்காநின்ற, வெண்புகலந்தான்கலந்துபுலன்களோடுமிந்திரியமவைகலந்துள்ளியங்குகின்ற, வன்புகலந்தறிவுகலந்துயிரைம்பூதமான்மாவுங்கலந்துகலந்தண்ணித்தூறி, யின்புகலந்தருள்கலந்துதுளும்பிப்பொங்கியெழுங்கருணைப்பெருக்காறேயின்பத்தேவே. (௩௭)

தண்ணமுதமதிகுளிர்ந்தகிரணம்வீசத் தடம்பொழிற்பூமணம்வீசத்தென்றல்வீச, வெண்ணமுதப்பளிக்குநிலாமுற்றத்தேழன்னிசைவீசத்தண்பனிநீரெடுத்துவீசப்பெண்ணமுதமனையவர்விண்ணமுதமூட்டப்பெறுகின்றசுகமனைத்தும்பிறபட்டோடக், கண்ணமுதத்துடம்புயிர்மற்றனைத்துமின்பங் கலந்துகொளத்தருங்கருணைக் கடவுட்டேவே,

(௩௮)

சுழியாதவருட்கருணைப்பெருக்கேயென்றுந் தூண்டாதமணிவிளக்கின்சோதியேவா, னொழியாதுகதிர்பரப்புஞ்சுடரேயென்பர்க் கோவாதவின்பருளு மொன்றேவின்

ணோர், விழியாலுமொழியாலுமனத்தினாலும் விளை
மெய்த்தவத்தாலும்விளம்புமெந்த,வழியாலுங்கண்
ளற்கரிதாய்ச்சுத்த மௌனவொளிபூரணத்தையம்
வே.

சொல்லொழியப்பொருளொழியக் காணமொ
சோர்ந்தொழியவுணர்வொழியத்தானங்கரின்ற, வ
ழியப்பகலொழியநடுவேயின்ற வானந்தவனுபவமே
வாழ்வே, நெல்லொழியப்பதர்கொள்வார் போலவின்
றைவொழியக்குறைகொண்மதநெறியோர்நெஞ்சக்,
லொழியமெய்யடியரிதயவெல்லாங் கலந்தாகலந்தினி
றகருணைத்தேவே.

(

அலைகடலும்படிவிலையுமனல்காலிரு மந்தார
றையகிலாண்டம்யாவும்,நிலைகுலையாவண்ணமருள்வெ
ளாதி நிரைநிரையாநிருத்தியுயிர்நிகழும்வண்ணங், க
லையாத்தத்துவஞ்செய்திரோதைகயென்னுந்தனியாலை
த்தியகூட்டலத்திலென்று மலைவறவீற்றிருந்தருளு
சேழுந்தி வழித்துணையேவிழித்துணையுண்மணியாம
வே,

(

வரம்பழுத்தநெறியேமெய்ந்நெறியிலின்பவெளம
த்தபெருவாழ்வேவானோர் தங்கள்,சிரம்பழுத்தபதப
ருளேயறிவானந்த சிவம்பழுத்தவநுபவமேசிதாகாச

ற், பரம்பழுத்தநடத்தரசேகருணையென்னும் பழம்பழு
த்தவான்றருவேபரமஞானத், திரம்பழுத்தயோகியர்தம்
யோகத்துள்ளே தினம்பழுத்துக்கனிந்தவருட் செல்வத்
தேவே.

(௪௨)

அண்டமெலாங்கண்ணைக்கொளினுங்காண்டற் க
ணுத்துணையுங்கூடாவென் றனந்தவேதம், விண்டலறி
யோலமிட்டுப்புலம்பமோன வெளிக்குள்வெளியாய்நிறை
ந்துவிளங்குமொன்றே, கண்டவடிவாயகண்டமயமாயெங்
குங் கலந்துநின்றபெருங்கருணைக்கடவுளேயெஞ்' சண்ட
வினைத்தொடக்கறச்சின்மயத்தைக்காட்டுஞ் சற்குருவேசி
வகுருவேசாந்தத்தேவே

(௪௩)

பேதமுறுமெய்ப்போதவடிவமாகிப் பெருங்கருணை
நிறம்பழுத்துச்சாந்தம்பொங்கிச், சீதமிகுந்தருள்கனிந்து
கனிந்துமாறுச்சின்மயமாய்நின்மலமேமணந்துநீங்கா, வா
தரவோடியன்மௌனச்சுவைமேன்மேற்கொண் டானந்த
ரசமொழுக்கியன்பாலென்றுஞ், சேதமுறுதறிஞருளந்தி
த்தித்தோங்குஞ் செழும்புனிதக்கொழுங்கனியே தேவ
தேவே.

(௪௪)

உடல்குளிரவுயிர்தழைக்கவுணர்ச்சியோங்க வுளங்க
னியமெய்யன்பருள்ளத்தூடே, கடலனையபேரின்பந்துளு
ம்பநாளுங் கருணைமலர்த்தேன்பொழியுங்கடவுட்காவே,

விடலரியவெம்போல்வாரிதயந்தோறும் வேதாந்தமரு
தளிக்கும்விருந்தேதேவேதந், தொடலரியவெளிமுழுதும்
ரவிஞானச் சோதிவிரித்தொளிர்கின்றசோதித்தேவே.

இரிவைபெறியகற்றிமறை முடிவினின்றுசேணம
கேட்கின்றகேள்வியேசொற், கரியவறைவிடுத்தருவவிலை
ருமேமேலை காணுமற்காண்கின்றகாட்சியேயுள், ளரியவிலை
யொன்றிரண்டுவைசேற்றுமதியாமலறிகின்ற வறிவே
ன்று, முரியசுதாநிலையின்றவுணர்ச்சிமேலோருண்ணும
ன்னுகின்றவொளியாந்தேவே. (௬௪

சொற்போதற்கரும்பெரியமறைகளுடித் தொடர்ந்
தொடர்ந்துயர்ந்திளைத்துத்துளங்கியேங்கிப், பிற்போத
ளைந்தன்பருளத்தேசென்ற பெருங்கருணைப் பெருவா
வேபெயராதென்றுந், தற்போதவொழிவினிடை நிறை
துபொங்கித்ததும்பிவழிந்தோங்கியெல்லாந்தானேயாகி
நிற்போதுத்தகம்புறமுங்கொத்துகின்ற சிவானந்தப்பெ
க்கேமெய்ச்செல்வத்தேவே, (௬

பொங்குபலசமயமெனுநதிகளெல்லாம்புகுந்துகல
நிடநிறைவாய்ப்பொங்கியோங்கும், கங்குகரைகாணுதக
லைபொங்கும் கண்ணுக்கக்கண்கின்றகடலேயண்டர், தங்
முண்டாப்பிறப்பேசடையெல்லாந் தணிக்கின்றதருவே
ந்தடமேஞானச், செங்குமுதமலரனருமதியேயெல்லா
செய்யவல்லகடவுளேதேவதேவே. (௬

வான்காணுமறைகாணு மலரோன்காணன் மால்காணு னுருத்திரனு மதித்துக்காணு, ஞான்காணு விடத்ததனைக் காண்பேமென் றுநல்லோர்கணவில்கின்றநலமேவேட்கை, மான்காணுவுளக்கமலமலர்த்தாங்கின்ற வான்சுடரேயானந் தமயமேயீன்ற,வான்காணுவிளங்கன்றுயமலங்தேங்குமன் பர்தமைக்கலந்துகொளுமமலத்தேவே. (௪௯)

மெய்ஞ்ஞானவிருப்பத்திலேறிக்கேள்விமீதேறித்தெளி ந்திச்சைவிடுதலேறி, யஞ்ஞானமற்றபடியேறியுண்மை ய றிந்தபடிநிலையேறியதுநானென்னுங், கைஞ்ஞானங்கழன் றேறிமற்றவெல்லாங் கடந்தேறிமௌனவியற்கதியிலேறி, யெஞ்ஞானமறத்தெளிந்தோர் கண்டுங்காணே மென்கின் றவநுபவமேயின்பத்தேவே. (௫0)

பற்றியாமுத்தர்தமையெல்லாம்வானமுப்பழம்போலவி ழுங்குகின்றபரமேமாசு,பெற்றறியாப்பெரும்பதமேபதத் தைக்காட்டும்பெருமானேயானந்தப்பேற்றின்வாழ்வே, யு ற்றறியாதின்னுமின்னுமறைகளெல்லா மோலமிட்டுத்தே டநின்றவொன்றேயொன்றுங், கற்றறியாப்பேதையேன்று னக்குமின்பங்கனிந்தளித்தவருட்கடலே கருணைத்தேவே

மெய்யுணர்ந்தவாதவூர்மலையைச்சுத்தவெளியாக்கிக்கல ந்துகொண்டவெளியேமுற்றும், பொய்யுணர்ந்தவெமை ப்போல்வார்தமக்குமின்பம் புரிந்தருளுங்கருணைவெள்ள ப்பொற்பேயன்பர், கையுறைந்துவளர்நெல்லிக் கனியேயு

ள்ளங் கரைந்துகரைந்துருகவவர்கருத்தினூடே, யுய்யுநெ றியொளிகாட்டிவெளியுமுள்ளு மோங்குகின்றசுயஞ்சுட ரேயுண்மைத்தேவே. (ருஉ)

ஒலிவடிவுநிறஞ்சுவைகளூற்றமூற்ற முறுந்தொழில்கள் பயன்பலவேறுளவாயெங்கு, மலிவகையா யெவ்வகையு மொன்றுயொன்று மாட்டாதாயெல்லாமும் வல்லதாகிச், சலிவகையில்லாதமுதற்பொருளேயெல்லாந் தன்மயமாய் விளங்குகின்றதனியேயாண்பெண், ணலிவகையல்லாதவ கைகடந்துநின்றவருட்சிவமேசிவபோகத்தமைந்ததேவே

பேராயவண்டங்கள்பலவும்பிண்டபேதங்கள் பற்பலவு ம்பிண்டாண்டத்தின், வாராயபலபொருளுங் கடலுமண் ணுமலையுளவுங்களவுமணலும்வானு, மூராதவான்மீனும ணுவுமற்றை யுள்ளனவுமளந்திடலாமோகோவென்னே, யா ராலுமளப்பரிதென்றனந்தவேத மறைந்திளைக்கநிறா மாகுந்தேவே. (ருச)

கற்பங்கள்பலகோடிசெல்லத்தீயகனலினடுவூசியின் மே ற்காலூன்றிப், பொற்பறமெய்யுணர்வின்றிவுறக்கமின்றி ப் புலர்ந்தெலும்புபுலப்படவைம்பொறியையோம்பி, நிற் பவருக்கொளித்துமறைக்கொளித்தியோகநீண்முனிவர்க் கொளித்தமரர்க்கொளித்துமேலாஞ், சிற்பதத்திற்சின்மய மாய்நிறைந்துஞானத் திருவாளருட்கலந்ததேவதேவே, (

மட்டகன்றநெடுங்காலமனத்தால்வாக்கான்மதித்திடினு ம்புலம்பிடினும்வாராதென்றே, கட்டகன்றமெய்யறிவோ ர்கரணநீக்கிக் கலையகற்றிக்கருவியெலாங்கழற்றிமாயை,வி ட்டகன்றுகருமமலபோதம்யாவும்விடுத்தொழித்துச்சகசு மலவீக்கநீக்கிச், சுட்டகன்றுநிற்கவவர்தம்மைமுற்றுஞ்சூ ழ்ந்துகலந்திடுஞ்சிவமேதுரியத்தேவே (௫௬)

உருநான்குமருநான்குநடுவேபின்றவுருவருவமொன்று மிவையுடன்மேலுற்ற,வொருநான்குமிவைகடந்தவொன் றுமாயவ்வொன்றிநடுவாய்நடுவுள்ளொன்றாய்நின்றே,யிரு நான்குமமைந்தவரைநான்கினோடு மெண்ணான்கின்மேலி ருந்துமிறையேமாயைக், கருநான்கும்பொருணான்குங்கா ட்டுமுக்கட்கடவுளேகடவுளர்கள்கருதுந்தேவே, (௫௭)

பாங்குளநாந்தெரிதுமெனத்துணிந்துகோடிப்பழமறை கடனித்தனியேபாடிப்பாடி, யீங்குளதென்றுங்குளதென் றோடியோடியிளைத்திளைத்துத் தொடர்ந்துதொடர்ந்தெட் டுந்தோறும், வாங்குபரவெளிமுழுதுநீண்டுநீண்டு மறை ந்துமறைந்தொளிக்கின்றமணியேயெங்குந், தேங்குபரமா னந்தவெள்ளமேசச்சி தானந்தவருட்சிவமேதேவதேவே,

எழுத்தறிந்து தமையுணர்ந்தயோகருள்ளத்தியலறிவா ந்தருவினிலன்பெனுமோருச்சி, பழுத்தளிந்துமௌனாந ழுஞ்சுவைமேற்பொங்கிப்பதம்பொருந்தவநுபவிக்கும் ப

பூமேமாயைக் கழுத்தரிந்துகருமமலத்தலையைவீசுங்கடுந்தொழிலோர்தமக்கேகறக்கருணைகாட்டி, விழுத்துணையாயமர்ந்தருளும்பொருளேமோன வெளியினிறையானந்தவிளைவாந்தேவே. (௫சுஎ)

உருத்திரர்நாரணர்பிரமர்விண்ணோர்வேந்தருறுகருடர்காந்தருவரியக்கர்பூதர், மருத்துவர்யோகியர்சித்தர்முனிவர்மற்றை வானவர்கண்முதலோர்தம்மனத்தாற்றேடிக்,கருத்தழிந்துதனித்தனியேசென்றுவேதங்களைவினவமற்றவையுங்காணேமென்று, வருத்தமுற்றுங்கவரோடுபுலம்பநின்றவஞ்சவெளியேயின்பமயமாந்தேவே (சுஎ)

பாயிரமாமறையனந்தமனந்தமின்னும் பார்த்தளந்துகாண்டுமெனப் பல்கால்மேவி, யாயிரமாயிரமுகங்களாலும்பன்று ளளர்தளந்தோரனுத்துணையு மளவுகாணு தேயிரங்கியழுதுசிவசிவவென்றேங்கித் திரும்பவருட்பரவெளிவாழ்சிவமேயீன்ற, தாயிரங்கிவளர்ப்பதுபோ லெம்போல்வாரைத் தண்ணருளால்வளர்த்தென்றுந் தாங்குந்தேவே. (சுக)

அந்தரமிங்கறிவோமற்றதனிலண்டமடுக்கடுக்காயமைந்தவளவறிவோமாங்கே, யுந்துறும்பல்பிண்ட நிலையறிவோஞ்சிவனுற்ற நிலையறிவோமற்றனைத்துநாட்டு, மெந்தைதின்தருள்விளையாட்டந்தோவந்தோ வெள்ளளவுமறிந்திலோ மென்னேயென்று, முந்தனந்தமறைகளெலாம் ....நின்றமுழுமுழுமுதலேயன்பர்குறைமுடிக்குந்தேவே

தோன்றுபரசாக்கிரமுங்கண்டோமந்தச்சொப்பனமு
ங்கண்டோமேற்சுழுத்திகண்டோ, வான்றபரதுரியநிலை
கண்டோமப்பாலதுகண்டோமப்பாலாமதுவுங்கண்டோ
மேன்றவுபசாந்தநிலை கண்டோமப்பா லிருந்தநினைக்கா
ண்கிலோமென்னேயென்று, சான்றவுபனிடங்களெலாம்
வழுத்தநின்றதன்மயமேசின்மயமேசகசத்தேவே. (௩௩)

பரிக்கிரகநிலைமுழுதுந்தொடர்ந்தோமேலைப்பரவிந்து
நிலையனைத்தும்பார்த்தோம்பாச, மெரிக்குமியற்பரநாத
நிலைக்கண்மெல்லவெய்தினேமப்பாலுமெட்டிப்போனே
ம், தெரிக்கரியவெளிமூன்றுந் தெரிந்தோமெங்குஞ் சிவ
மேநின்சின்மயமோர்சிறிதுந்தேறேம், தரிக்கரிதென்றாக
மங்களெல்லாம்போற்றத் தனிநின்றபரம்பொருளேசாந்
தத்தேவே (௩௪)

மணக்குமலர்த்தேனுண்டவண்டேபோலவளர்பரமான
ந்தமுண்டுமகிழ்ந்தோமெல்லா, மிணக்கமுறக்கலந்துகல
ந்தீதமாதற்கியற்கைநிலையாததுதா னெம்மாற்கூறுங், க
ணக்குவழக் கனைத்தினையுங்கடந்ததந்தோ காண்பரிதின்
கெவர்க்குமெனக்கலைகளெல்லாம், பிணக்கறநின்றோலமி
டத்தனித்துநின்ற பெரும்பதமேமதாதீதப் பெரியதே
வே. (௩௫)

பொதுவென்றும்பொதுவினடம்புரியாநின்றபூரணசி
ற்சிவமென்றும்போதானந்த, மதுவென்றும் பிரமமென்

றும் பரமமென்றும் வகுக்கின்றோர்வகுத்திடுக வதுதா
னென்று, மிதுவென்றுஞ்சுட்டவொண்ணுதகுறுற்சும்மாவி
ருப்பதுவேதுணிவெனக் கொண்டிருக்கின்றோமா, வி
துவென்றதண்ணளியாற்கலந்துகொண்டு விளங்குகின்ற
பெருவெளியேவிமலத்தேவே. (௬௬)

அருமறையாகமங்கண் முதனடுவீறெல்லா மமைந்த
மைந்துமற்றவைக்குமப்பாலாகிக், கருமறைநந்துவுயிர்டொ
றுங்கலந்துமேவிக்கலவாமற் பன்னெறியுங்கடந்துஞான
த், திருமணிமன்றகத்தின்ப வுருவாயென்றுந் திகழ்கரு
ணைநடம்புரியுஞ்சிவமேமோனப், பெருமலையேபரமவி
ன்ப நிலையேமுக்கட்பெருமானே யெத்திறத்தும் பெரிய
தேவே. (௬௭)

என்னுயிர்நீயென்னுயிர்க்கோருயிருநீயென்னின்னுயி
க்குத்துணைவனீயென்னையீன்ற, வன்னைநீயென்னுடைய
வப்பனீயென்னரும்பொருணீயென்னிதயந் தன்புநீயெ
ன், னன்னெறிநீயெனக்குரியவுறவுநீயென்னற் குருநீயெ
னைக்கலந்தநட்புநீயென், றன்னுடையவாழ்வுநீயென்னை
க்காக்குந்தலைவனீகண்மூன்றுதழைத்ததேவே. (௬௮)

தானாகித்தானல்லதொன்றுமில்லாத் தன்மையனுயெ
வ்வெவைக்குந்தலைவனாகி, வானாகிவெளியனலாய்நீருமாகி
மலர்தலையவுலகாகிமற்றுமாகித், தேனாகித்தேனின்றுஞ்

றேன் செய்யும்பிழைமைய நோக்கி, * யிற்றவளைக்கேள்விடல் போல்விடுதியேல்யானென்செய்வே னெங்குறுவேனென் சொல்வேனே, (அக)

அடிமைசெயப் புகுந்திடுமெம்போல்வார் குற்றமாயிரமும்பொறுத்தருளுமரசேநாயேன், கொடுமைசெயுமனத்தாலே வருந்தியந்தோகுரங்கின் கைமாலையெனக்குலையாநின்றேன், கடுமைசெயப்பிறர்துணிந்தா லடிமைதன்னைக் கண்டிருத்தலழகன்றேகருணைக்கெந்தாய், செடுமையுளப் பாதகனேனென்செய்வேனின் றிருவுளத்தை யறிந்திலேன்றிகைக்கின்றேனே, (அஉ)

கூடம்பாதமெய்ந்நெறியோருளத்தேயென் றுங்குறையாதவின்பளிக்குங் குருவேயாசைத், தாம்பாலேயாப்புண்டுவருந்திநாயேன் றையலார்மையலெனுந் சலதியாழ்ந்துவேம்பாமனுவர்நீருண்டுயங்குகின்றே னுன்னடியார்களைமேனுவந்துநின்றே, தீம்பாலுஞ்சருக்கரையுந்தேனுநெய்யுந்தேக்குகின்றுரிதுதகுமோதேவதேவே, (அ௩)

வெள்ளமலர்சடைக்கனியேமூவராகிவிரிந்தருளுமொருதனியேவிழலனேனைக், கள்ளமனக்குரங்காட்டுமாட்டமெல்லாங்கண்டிருந்துமிரங்கிலையேற்கவலையாலே, யுள்ள

* இற்றவள்-எ-துமனையறங்காப்போள்,

மெலிந்துழல்கின்றசிறியேன் பின்னருய்யும்வகையெவ்வ
கையீதுன்னுந்தோறும், பொள்ளெனமெய்வியர்க்கவுளம்
பதைக்கச்சோபம் பொங்கிவழிகின்றதுநான்பொறுக்கி
லேனே. (அச)

எனையறியாப்பருவத்தே யாண்டுகொண்ட வென்னா
சேயென்குருவேயிறையேயின்று, மனையறியாப்பிழைக
ருதுமகிழ்நன்போல மதியறியேன்செய்பிழையனைத்
துட்கொண்டே, தனையறியாமுகத்தவர்போலிருந்தாயெ
ந்தாய்தடங்கருணைப்பெருங்கடற்குத்தகுமோகண்டா, ய
னையறியாச்சிறுகுழவியாகியிங்கே யடிநாயேனரற்றுகின்
றேனந்தோவந்தோ, (அரு)

தீவினைநல்வினை யெனும்வன்கயிற்றாலிந்தச் சீவர்களை
யாட்டுகின்றதேவேநாயே, னேவினைநேர்கண்மடவார்மை
யற்பேயாலிடருழந்துஞ்சலிப்பின்றியென்னேயின்னு, நா
வினையென்பால்வருந்திக்கறண்டுகின்ற நாய்க்குநகைதோ
ன்றநின்றுநயக்கின்றேனே, ஒவினைவிட்டெருதுகறந் திங்
வான்செல்லு மறிவிலிக்குமறிவிலியேனானவாறே (அகா)

எம்பெருமானின்விளையாட் டென்சொல்கேனோது
மறியாச்சிறியேனெனைத்தானிங்கே, செம்புனலாற்குழை
த்தபுலாற்சுவர்சூழ்பொத்தைச் சிறுவீட்டிலிருட்டறை
யிற்சிறைசெய்தந்தோ, கம்பமுறப்பசித்தழலுங் கொளு

ந்தவந்தக்கரணமுதற்பொறிபுலப்பேய்கவர்ந்துசூழ்ந்துவ
ம்பியற்றக்காமாதியரட்டரெல்லாமடிபிடித்து வருத்தவெ
ன்றேுவளர்த்தாயெந்தாய். (அஎ)

அம்பரத்தேயானந்த வடிவாலென்று மாடுகின்றமாம
ணியேயரசேநாயே, விம்பரத்தமெனுமுலக நடையிலந்
தோ விடருழந்தேன்பன்னெறியிலெனையிழுத்தே,யம்பர
த்திருடியலைப்படுத்துமிந்தப் பாவிமனமெனக்குலயப்படு
வதில்லை, கொம்பரற்றவிளங்கொடிபோற்றளர்ந்தேனென்
னைக்குறிக்கொள்ளக்கருதுதியோகுறித்திலாயோ. (அஅ)

கண்ணுடையருதற்கரும்பேமன்றிலாடுங் காரணகாரிய
ங்கடந்தகடவுளேயின், றண்ணுடையமலரடிக்கோர்சிறிது
மன்பு சார்ந்தேனேசெம்மரம்போற்றணிந்தநெஞ்சேன்,
பெண்ணுடையமயலாலேசுழல்கின்றேனென் பேதைமை
யையென்புகல்வேன்பேயனேனைப், புண்ணுடையபுழுவி
ரும்புமுள்ளென்கேளே புலைவிழைந்துவிலைவெறுத்தே
ன்புலையனேனே. (அகூ)

பொன்னுடையாரிடம்புகவோவவர்கட்கேற்கப் பொய்
மொழிகள்புகன்றிடவோபொதிபோலிந்தக்,கொன்னுடை
யாவுடல்பருக்கப்பசிக்குச்சோறு கொடுக்கவோகுளிர்க்கா
டைகொளவோவஞ்ச. மின்னிடையார்முடைச்சிறுநீர்க்கு
ழிக்கணந்தோ வீழ்ந்திடவோதாழ்ந்திளைத்துவிழிக்கவோ
தா, வென்னுடையாயென்னுடையாயென்னையிங்கேயெடு
த்துவளர்த்தனையறியேனென்சொல்வேனே. (கூ0)

வருகணத்துவாழ்ந்திடுமோவிழுமோவிந்த மலக்கூடெ
ன்றறிஞரெலாம்வருந்தக்கேட்டு, மருகணைத்துக்கொளப்

பெண்பே யெங்கேபோட்டுக் கடைத்திடவெண்சோறெங்
கேயாடையெங்கே, யிருகனுக்குவியப்பெங்கேவசதியான
விடமெங்கேயென்றுதிரிந்திளைத்தேனல்லா, லொருகண
த்துமுனைநினைந்ததுண்டோவென்னையுடையானேயெவ்வு
கைகாணுய்யுமாறே. (௬௧)

பொன்மலையோசிறிதெனப்பேராசைபொங்கிப் புவிக
டையிற்பற்பலகாற்போந்துபோந்து தென்மலையோந்திம
லையோவென்றுதேடி நிலைகுலைந்துதன்றியுனை நினைந்துதே
டி, மன்மலையோமாமணியோமருந்தோவென்றுவழுத்திய
தேயில்லையிந்தவஞ்சநெஞ்சாய், கன்மலையோவிரும்போசெ
ம்மரமோபாறைக்கருங்கல்லோ பாராய்முருட்டுக்கட்டை
யேயோ, (௬௨)

தம்மைமறந்தருளமுதமுண்டுதேக்குந் தகையுடையார்
திருக்கூட்டஞ்சார்ந்துநாயேன் வெம்மைமெலாந்தவிர்ந்து
மனங்குளிரக்கேள்வி விருந்தருந்திமெய்யறிவாம் வீட்டி
லென்றுஞ் செம்மைமெலாந்தருமெனன வினைமேற்கொ
ண்டுசெறியிரவுபகலொன்றுந்தெரியாவண்ண, மிம்மையி
லேயெம்மையினுங்காணச்சுத்த வின்பநிலையடைவேனோ
வேழையேனே, (௬௩)

அடியனேன்பிழையனைத்தும்பொறுத்தாட்கொண்டவ
ருட்கடலேமன்றோங்குமரசேயிந்நாள், கொடியனேன்செ
ய்பிழையைத்திருவுள்ளத்தே கொள்ளுதியோவெண்குரு
லங்குறிப்பதுண்டோ, நெடியனேமுதற்கடவுட் சமுகத்
தோர் தங்கெடும்பிழைகளாயிரமும் பொறுத்துமாயை

